# காலத்தால் அழியாத கலையின் உறைவிடம்... மாமல்லபுரம்

கடற்கரைக் கோவில் – மாமல்லபுரம், தமிழ்நாடு, இந்தியா
60 கி.மீ. தொலைவில் விமான நிலையம் உள்ளது



அர்ஜுன தபசு



பஞ்சபாண்டவ ரதங்கள்



வெளிக்கொணரப்பட்ட கலைப்படைப்பு
(சுனாமிக்குப் பிறகு)

பல்லவ மன்னர்களின் தலைநகராக மாமல்லபுரம் விளங்கிய காலத்திற்கு பயணிப்போம்! உலகப்பாரம்பரிய சின்னமாக விளங்கும் மாமல்லபுரத்தில், கல்லிலே உயிரோவியம் படைத்த தலைசிறந்த சிற்பிகளின் படைப்புகளை கண்டு ரசிப்பீர்! திராவிட காலத்தை குறிப்பிடும் வகையில், மலையைக் குடைந்து உருவாக்கப்பட்ட படைப்புகளில் மூழ்கித் திளையுங்கள்!

ஏழு கடற்கரைக் கோவில்களில், காலத்தைக் கடந்து மிஞ்சியிருக்கும் ஒரேயொரு கோவிலான, புனிதமான இரண்டடுக்கு கோவிலின் பேரழகை கண்டு ரசிப்பீர்! மகாபாரதக் கதையை தத்ரூபமாக நினைவூட்டும் வகையில் சித்தரிக்கப்பட்ட பஞ்சபாண்டவ ரதங்களின் பிரம்மாண்டம் உங்கள் கண்களில் நிறையட்டும்!

கலையும் கலாசாரமும் கோலோச்சிய அந்த பாரம்பரியமிக்க காலத்தின் நினைவுகளைக் கொண்டு, தொட்டு தழுவும் கடற்காற்று உங்களை தாலாட்டட்டும். இதற்கும்மேலாக சுனாமி பேரலை வெளிக்கொணர்ந்த புதையுண்ட பழம்பெரும் கலைப்படைப்பை கண்டு களிப்பீர்.

செ.ம.தொ.இ./1326/வரைகலை/2005




experience yourself

**தமிழ்நாடு சுற்றுலா,** தொலைபேசி எண். : +91-44-25383333 / 4444 / 9857 நகரி : +91-44-25361385 (சென்னை, இந்தியா)
மின்அஞ்சல் : ttdc@vsnl.com www.tamilnadutourism.org கணினி மூலம் முன்பதிவு செய்ய : www.ttdconline.com

# கோ-ஆப்டெக்ஸ் காலத்திற்கேற்ற புதுமையுடனும் பாரம்பரியப் பெருமையுடனும்... 1935 முதல் மிகச் சிறந்த இரகங்களை உங்களுக்காகவே வழங்குகிறது.

- ★ காஞ்சிபுரம் அசல் பட்டு சேலைகள்
- ★ சேலம் தரமிக்க பட்டு சேலைகள்
- ★ ஆரணி தரமிக்க பட்டு சேலைகள்
- ★ கோயமுத்தூர் உயர்ரக பருத்தி சேலைகள்
- ★ உறையூர் பருத்தி சேலைகள்
- ★ சேலம் உயர்ரக பருத்தி சேலைகள்
- ★ மதுரை சுங்கடி புடவைகள்
- ★ சென்னிமலை ஏற்றுமதி தரம் வாய்ந்த படுக்கை விரிப்புகள்
- ★ கோவை ஏற்றுமதி தரம் வாய்ந்த எரலை துண்டுகள் (டவல்கள்)
- ★ குறிஞ்சிப்பாடி ஏற்றுமதி தரம் வாய்ந்த லுங்கிகள்
- ★ தாத்தையங்கார்பேட்டை வேட்டிகள்




**இவை அனைத்தும் உங்களுக்காக வழங்குகிறது கோ-ஆப்டெக்ஸ்.**
**வாருங்கள். பாருங்கள். வாங்குங்கள் - முழு திருப்தியைக் கண்டு மகிழுங்கள்.**




ஆண்டுதோறும் 1.00.000 பட்டு புடவைகள். 3.00.000 பருத்தி புடவைகள் 10.00.000 பருத்தி விரிப்புகள் மற்றும் 10.00.000 டவல்கள் விற்பனை செய்யப் படுகின்றன. டெல்லி. மும்பாய். கொல்கத்தா. பெங்களூர். அகமதாபாத். கோவை. திருச்சி மற்றும் இந்தியாவின் பிற முக்கிய நகரங்களில் எங்கள் சேவை உங்களுக்காக.

**தலைமுறைகளாய் தொடரும் பந்தம் - கோ-ஆப்டெக்ஸ்**



அம்புலிமாமா மதிமுகம் : 58 அக்டோபர் : 2005 புன்னகை : 10



# பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக














**SUBSCRIPTION**

For USA and Canada
Single copy $2
Annual subscription $20

*Remittances in favour of Chandmama India Ltd.*
to
**Subscription Division**
**CHANDAMAMA INDIA LIMITED**
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal,
Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/ - இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியாடரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# பொது நலத்திற்காகப் பாடுபடுவோம்!

அக்டோபர் மாதம் 24ஆம் தேதி ஐ.நா.சபை எனும் ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் தோன்றிய தினம் கொண்டாடப்படவிருக்கிறது. இதைத்தவிர இந்த மாதத்தில் அகில உலக முதியோர் தினம் 1ஆம் தேதியும், அகில உலக உணவு தினம் 16ஆம் தேதியும், வறுமையொழிப்பு தினம் 17ஆம் தேதியும் கொண்டாடப்படவிருக்கின்றன.

உலகப்போரால் (1914-18) நிகழ்ந்த கொடுமைகளே உலக நாடுகளின் கூட்டுறவுக்குழு தோன்றக் காரணமாயிருந்தன. உலக நாடுகளுக்கிடையே மேலும் போர் நிகழாமல் தடுக்கவும், அமைதியை நிலைநாட்டவுமே அதன் குறிக்கோளாக இருந்தது. அப்படியிருந்தும், அந்த அமைப்பு தோன்றிய இருபது ஆண்டுகளிலேயே இரண்டாம் உலகப்போர் தோன்றி, ஆயிரக் கணக்கான ராணுவ வீரர்களும் பொதுமக்களும் உயிரிழந்தனர்.

போருக்குப்பிறகு, பல நாட்டு மக்களின் முயற்சியால், ஐக்கிய நாடுகள் ஸ்தாபனம் என்ற ஓர் அமைப்புத் தோன்றியது. உலக நாடுகளிக்கிடையே போர் மூளுவதைத் தடுக்க வேண்டும் என்ற உறுதியான குறிக்கோளுடன், ஐ.நா.சபை செயற்படத் தொடங்கியது. பொது நலனை அடிகோலுவதற்கு ஐ.நா சபைக்கு பொதுமக்களின் ஒத்துழைப்பும் தேவை.

பொது நலத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில், அக்டோபர் 2ஆம் தேதி பிறந்த நமது தேசத் தந்தை மகாத்மா காந்தியின் அறிவுரையை நினைவு கூர்வோம்: ' 'தீமைகள் எனும் இருண்ட வனத்தில் திசை தெரியாமல் தடுமாறும் மனிதனுக்கு சரியான பாதையில் செல்ல ஒளி தேவை. அந்த ஒளி இருந்தால் சரியான பாதையை அவனே கண்டு கொள்வான். தீய சக்திகளை அகற்றி அமைதிக்கு வழி காட்டும் அந்த ஒளியை அடைய நாம் முயல்வோம்!''

ஆசிரியர் : **விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org







# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (மார்ச்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



மந்திரி அரசரிடம் சென்று ''அரசே இவருக்குப் பணம் கொடுத்தால் இது போல பலர் வந்து பணம் பெற்றுச் சென்று விடுவார்கள். அப்பொழுது நம் கஜானாவிலும் பணம் தீர்ந்து விடும். எனவே நான் ஒரு யோசனையைக் கூறுகிறேன். ஒரு பறங்கிக்காய் ஒரு யானை அளவு உள்ளது. எனவே நாம் இந்த யானையைப் பெற்றுக் கொண்டு மோகனுக்கு சந்திரன் அளித்த பரங்கிக்காயை அளித்து விடலாம்'' என்றார்.

இதைக் கேட்ட துணை மந்திரியும் ''மோகன் ஒரு பணக்கார ஜமீன்தார். அவருக்கு நூறு பொற்காசுகள் கொடுத்தால் அவர் அதைக் கொண்டு ஏழைகளுக்கு உதவ மாட்டார். அந்தப் பணத்தைத் தானே வைத்துக் கொள்வார். ஆகையால் மந்திரி சொன்னது போல் நீங்கள் மோகனுக்கு சந்திரன் அளித்த பரங்கிக்காயைப் பரிசாக கொடுப்பதே சிறந்தது. இதை நாங்கள் அனைவரும் ஏற்றுக்கொள்கிறோம்'' என்றார்.

அதேபோல் அரசவையில் இருந்த அனைவரும் ''ஆமாம்'' என்றனர். மன்னன் சிறிது நேரம் யோசித்து விட்டு சந்திரன் அளித்த பரங்கிக்காயை மோகனுக்குப் பரிசாக அளித்தார்.

பாவம் மோகன் தான் பரிசாகப் பெற்ற பரங்கிக்காயை தூக்க அவனுக்குப் பத்து கூலியாட்கள் தேவைப்பட்டது. ஒவ்வொரு கூலியாளுக்கும் பத்து பொற்காசுகள் கொடுக்க வேண்டி வந்தது.

கூலியாட்களுக்குப் பொற்காசுகளைக் கொடுக்கும் பொழுது மோகன் தன் மனத்தில், 'நான் பேராசைப் பட்டதால் அதற்கு சரியான நஷ்டம் ஏற்பட்டு விட்டது' என்று கூறிக் கொண்டான்.

**மு. பிரணவ்** (7ஆம் வகுப்பு)
எண் 227, 2வது வீதி, காந்திபுரம்
கோவை - 641012.



# தருமமே வெல்லும்

லட்சுமிபுரம் என்ற கிராமத்தில் அண்ணாமலை என்ற தனவந்தர் வாழ்ந்து வந்தார். அவரிடம் ஓரளவிற்கு கணிசமான நிலங்கள் இருந்தன. பல ஏழை விவாயிகள் அவரிடம் கூலிக்கு வயலில் வேலை செய்து வந்தனர். நேர்மையும், தயாள மனமும், நற்குணங்களும் நிரம்பிய அண்ணாமலை, தன்னிடம் வேலை செய்பவர்களின் உழைப்பிற்குத் தகுந்த ஊதியம் கொடுத்து, அவர்களை மகிழ்ச்சியுடன் வாழ வைத்தார். விவசாயிகளும் அண்ணாமலையை தங்களை வாழ வைக்கும் தெய்வமாகக் கருதினர். அண்ணாமலை சிறந்த மல்யுத்த வீரராகத் திகழ்ந்தார். அவர் தனது கிராமத்தில் அடிக்கடி மல்யுத்தப் போட்டிகளை நிகழ்த்தி, அதில் வெற்றி பெறுபவர்களுக்குப் பரிசுகள் அளித்து ஊக்குவித்து வந்தார். இதனால் அண்ணாமலையின் பெயரும், புகழும் பக்கத்திலுள்ள கிராமங்களுக்கெல்லாம் பரவியது.

லட்சுமிபுரம் அருகில் சமஸ்திபுரம் எனும் கிராமத்தில், ஜமீன்தாராயிருந்த பூபதி அண்ணா மலையின் புகழ் பரவுவதைக் கண்டு அவர் மீது பொறாமை கொண்டார். அவருடைய நிலங்களை எல்லாம் அபகரித்துத் தனதாக்கிக் கொள்ள வேண்டும் என்ற தீய எண்ணம் பூபதிக்கு ஏற்பட்டது. உடனே அவர் தன்னுடைய திவானை அழைத்து, ''இந்த அண்ணாமலையின் புகழ் நாளுக்குநாள் பரவுகிறது. அவனுடைய நிலங்களை என்னுடையதாக ஆக்கிக் கொள்வதற்கு என்ன செய்யலாம் கூறு? '' என்று கேட்டார்.

''நம்முடைய இளைய எஜமானர் அழகிரிக்கு அவருடைய மகளை திருமணம் செய்து வைத்தால், அவருடைய சொத்துகள் நம் வசமாகும்,'' என்று திவான் யோசனை தந்தார்.

-அமுதா-



உடனே பூபதி தன் திவான் மற்றும் ஏராளமான பணியாட்களுடன் அமர்க்களமாக லட்சுமிபுரத்திற்கு வந்து, அண்ணாமலையிடம் அ வருடைய மகளை தன் மகனுக்குத் திருமணம் செய்து தருமாறு கேட்டார். ஆனால் அண்ணாமலை, ''பிரபு! நீங்கள் மிகப் பெரிய ஜமீன்தார், உங்களுடைய அந்தஸ்திற்கு முன், நான் சாதாரண மானவன். ஆகவே இந்த சம்பந்தம் பொருந்தாது. தவிர, நான் ஏற்கெனவே என் நண்பருடைய மகனுக்கு அவளைத் திருமணம் செய்து தருவதாக வாக்களித்து விட்டேன்,'' என்றார்.

பூபதிக்குப் பெருத்த அவமானம் ஏற்பட்டு விட்டதால் அண்ணா மலையை பயமுறுத்தினார். அண்ணா மலையும் சிலநாள்கள் அவகாசம் தரும்படிக் கேட்டுக் கொண்டார்.

ஆனால் பிறகு யோசித்துப் பார்த்ததில், பூபதியின் மிரட்டலுக்கு அடிபணிவதில் அர்த்தமில்லை என்று அண்ணாமலைக்குத் தோன்றியது. தவிர, தான் முன்னமே திட்டமிட்டு இருந்தபடி, தன் நண்பரின் மகனுக்கே தன் மகளை திருமணம் செய்து வைத்து விட்டார்.

செய்தி அறிந்ததும் அடிபட்ட புலியைப் போல் உறுமினார் பூபதி. ''கேடு கெட்ட அண்ணாமலையின் திமிரைப் பார்த்தாயா? நான் வலியச் சென்று பெண் கேட்டும், என்னை முகத்தில் அடித்ததுபோல் அவமானப் படுத்தி விட்டான்'' என்று ஆவேசத் துடன் கூவினார். ''உங்களை மட்டு மல்ல! என்னையும் அவர் அவமானப் படுத்தி விட்டார். அப்பா! நான் அவருடைய நிலங்களை உங்களுக்குக் கைப்பற்றித் தருகிறேன்!'' என்று கோபத்துடன் அவருடைய மகன் அழகிரியும் கூவினான்.

''கேளுங்கள் அப்பா! நான் ஒரு சிறந்த மல்யுத்த வீரன் என்று உங்களுக்குத் தெரியும். தன்னை ஒரு மல்யுத்த வீரன் என்று கூறிக் கொள்ளும் அண்ணாமலையை என்னுடன் போட்டிக்கு அழைப்பேன். நான் வெற்றி பெற்றால், அந்த நிலங்களை எனக்குக் கொடுத்து விடும்படி சவால் விடுவேன். அந்தக் கிழட்டுப் புலியை மல்யுத்தத்தில் மண்ணைக் கவ்வச் செய்து விட்டு, அவருடைய நிலங் களைத் தட்டிப் பறிப்பேன்!'' என்று தன் திட்டத்தைக் கூறினான். பூபதியும் அதைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தார்.

தனது திட்டத்தை செயலாக்க விழைந்த அழகிரி, ஊரார் அறிய பகிரங்கமாக அண்ணாமலைக்கு ஒரு சவால் விட்டான். ''தன்னை ஒரு சிறந்த மல்யுத்த வீரராகக் கருதும் அண்ணாமலை என்னுடன் ஒருமுறை போட்டியிட்டுப் பார்க்கட்டும். அவர் தோற்றால், அவருடைய நிலங்கள் எனது உடமையாகும். அவர் வெற்றி பெற்றால், அவரை எங்களுக்கு சமமான ஜமீன்தாராகக் கருதி கௌரவிப்போம்,'' என்றான்.

லட்சுமிபுரவாசிகள் இந்த சவாலைக் கேட்டு அதிர்ச்சியுற்றனர். வயது முதிர்ந்த அண்ணாமலையால் எப்படி இளவட்டமான அழகிரியுடன் மல்யுத்தம் செய்ய முடியும்? என்று கூறி, அண்ணாமலை போட்டியில் சேராமல் தடுக்க முயன்றனர். ஆனால் அண்ணாமலையோ, '' ஒருவன் பகிரங்கமாக சவால் விட்டபிறகு, அதை ஏற்றுக் கொள்ளாமல் பின் வாங்குவது அழகல்ல. தருமத்தின் துணை எனக்கு எப்போதும் உண்டு. அந்த தருமமே எனக்கு வெற்றியைத் தரும்'' என்று சொல்லி விட்டுப் போட்டியில் பங்கேற்கத் தயாரானார்.

போட்டி நடக்கும் நாளும் வந்தது. போட்டியும் இனிதே தொடங்கியது. ''தருமமே வெல்லும்'' என்று பார்வையாளர்கள் கூச்சலிட, அழகிரிக்கு அப்போது இலேசாக பயம் ஏற்பட்டது, மனத்தைத் தேற்றிக் கொண்டு, மல்யுத்தத்தில் இறங்கினான் அழகிரி. ஆனால் என்ன ஆச்சரியம்! முதல் சுற்றிலேயே அண்ணாமலையால் தாக்கப்பட்டு அழகிரி தடுமாறி கீழே விழுந்தான். உடனே போட்டியை நிறுத்திய அழகிரி மக்களிடம், ''அண்ணாமலை என்ற தருமராஜரை என்னால் வெல்ல முடியாது. நான் என் தோல்வியை ஒப்புக் கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, அவமானத்தால் குன்றிப் போயிருந்த தன் தந்தையுடன் சமஸ்திபுரம் திரும்பிச் சென்றான். சுற்றியிருந்த மக்கள் அண்ணாமலையைத் தோளில் தூக்கிக் கொண்டு ''தருமமே வென்றது'' என்று மகிழ்ச்சியில் கூக்குரலிட்டனர்.





# உழைத்து வாழ வேண்டும்

சத்யன் தன் குழந்தை பருவத்தி லேயே தந்தையை இழந்து விட்டான். தந்தையற்ற மகனை அவன் தாய் லட்சுமி மிகவும் அன்புடன் வளர்த்து வந்தாள். இயல்பாகவே நல்லவனாக இருந்தும், கெட்ட நண்பர்களின் சகவாசத்தால், சத்யன் முறை தவறி நடக்க ஆரம்பித்தான். லட்சுமி அவனுக்கு எவ்வளவோ புத்திமதி கூறியும் சத்யன் திருந்தவில்லை. இளைஞனாக மாறிய பிறகும், பொறுப்பின்றி திரிந்த தன் மகனின் எதிர்காலத்தைப் பற்றி கவலைப் பட்டே, லட்சுமி ஒருநாள் இறந்து போனாள்.

தனக்கு ஒரே துணையாயிருந்த தாயைப் பறிகொடுத்த பிறகுதான் தன் நிலைமை சத்யனுக்குப் புரிந்தது. கையில் காசு பணமில்லை. வேலையும் கிடையாது. ஆதரவு காட்ட உறவினர் களும் இல்லை. விரக்தி அடைந்த சத்யன், ஊரைவிட்டு, மக்களை விட்டு காட்டை நோக்கிச் சென்றான்.

காட்டிற்குச் செல்லும் வழியில், ஒரு மரத்தடியில் ஒரு கிழவி சீதாப் பழங்களை விற்றுக் கொண்டு இருந்ததைக் கண்டான். சத்யனைப் பார்த்த கிழவி அவனை, ''இந்த வெயிலில் எங்கே செல்கிறாய்? இந்த மர நிழலில் சிறிது ஓய்வெடுத்துக் கொள்'' என்று சீதாப்பழங்களைக் கொடுத்து உபசரித்தாள்.

''பாட்டி, என்னிடம் காசு இல்லையே!'' என்றான் சத்யன். ''நீ என்னுடைய பேரப்பிள்ளை மாதிரி இருக்கிறாய். பணம் எதுவும் எனக்கு நீ தர வேண்டாம். இந்தா, சாப்பிடு!'' என்று அன்புடன் கூறினாள்.

பசியுடன் இருந்த சத்யனுக்கு அந்தப் பழங்கள் அமுதம் போல் இருந்தன. அவற்றை உண்ட பின் மரநிழலில் ஓய்வெடுத்துக் கொண்டு இருந்த சத்யனிடம், கிழவி தன்னைப் பற்றி பேசத் தொடங்கினாள். ''மகனே!

-காயத்ரி சங்கரன்-

எனக்கு எண்பது வயது ஆகி விட்டது. என்னுடைய மகன், மருமகள் பேரன் அனைவரும் இறைவனடி சேர்ந்து விட்டனர். நான் மட்டும் தனியே இருக்கிறேன். எனக்கு இன்னும் சாவு வரவில்லை. என்ன செய்வது? வயிறு என்று ஒன்று இருக்கிறதே! ஆகையால் இந்தப் பழங்களை விற்று, என் நாள்களைக் கழிக்கிறேன்!'' என்றாள்.

சத்யன் கிழவியிடம் இருந்து விடை பெற்றுக் கொண்டு, தன் பயணத்தைத் தொடங்கினான். வழியில் மரம் ஒன்றில் அமர்ந்து கிளைகளை வெட்டிக் கொண்டிருந்த ஒரு சிறுவனை பார்க்க நேரிட்டது. அவனுடைய செய்கையைக் கண்டு வியப்படைந்த சத்யன் அவனை நோக்கி, ''தம்பி! சிறுவனான நீ இவ்வளவு கடினமான வேலையை ஏன் செய்கிறாய்?'' என்று கேட்டான். அதற்கு அவன், ''ஐயா, தாய் தந்தை யற்ற அநாதை நான். விறகு வெட்டி விற்று, அதில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறேன்'' என்றான்.

சிறுவனின் அந்த சொற்களை கேட்டதும், சத்யனுக்கு 'சுள்' என உரைத்தது. ஒரு சிறுவன் கூட தானே உழைத்து தன் பிழைப்பை கவனிக்கிறான். வயதான கிழவி கூட உழைக்கிறாள். நான் மட்டும் ஏன் இவ்வாறு பொறுப்பின்றி, வேலை எதுவும் செய்யாமல் காலம் கழிக்கிறேன்? நானும் இவர்களைப் போல் உழைத்து வாழ வேண்டும் என்று அவன் சிந்தனை அலைகளை ஓடின. உடனே அவன் தன் கிராமத்தை நோக்கித் திரும்பிச் சென்றான். கிராம



அதிகாரியான சந்திரனை சந்தித்தான்.

''வா, சத்யா!'' என்று அவனை சந்திரன் வரவேற்றார். அவரை வணங்கி விட்டு, சத்யன், ''ஐயா! என்னைப் பற்றி உங்களுக்குத் தெரியும். என் பெற்றோர் ஈட்டிய சொத்துகளை வீணே கரைத்த பாவி நான்! ஆனால் நான் இப்போது திருந்தி விட்டேன். நானும் மற்றவர்களைப் போல் உழைத்து வாழ விரும்பு கிறேன். எனக்கு ஏதாவது வேலை போட்டுக் கொடுத்தீர்களானால், நான் மிக நன்றியுள்ளவனாக இருப்பேன்!'' என்று பணிவுடன் வேண்டினான்.

புன்னகையுடன் அவனை நோக்கிய சந்திரன், ''இப்போது உனக்கு தருகிற மாதிரி வேலை எதுவும் என்னிடம் இல்லை. ஆனால் நீ இவ்வாறு மனம் திருந்த வேண்டும் என்பதே உன் தாயின் விருப்பமாக இருந்தது. ஒருநாள் நீ கட்டாயம் திருந்துவாய் என்ற நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது. அதனால்தான் அவள் என்னிடம் சிறிது பணமும், இரண்டு ஏக்கர் நிலமும் கொடுத்து வைத்திருக்கிறாள். உழைத்து வாழ வேண்டும் என்ற உறுதி உனக்கு ஏற்பட்டு விட்டதால் உன் தாய் உனக்காக தந்திருப்பதை உன்னிடம் இன்று அளிக்கிறேன்!'' என்று கூறி விட்டு உள்ளே சென்றவர் திரும்பி வந்து சிறிது ரொக்கப்பணமும், நிலங்களுக்கான பத்திரத்தையும் அவனிடம் அளித்து அவனை வாழ்த்தி அனுப்பினார்.

சத்யன் மீண்டும் ஒருமுறை அவரை வணங்கி விட்டு, தன் அன்னைக்கு தன் இதயப்பூர்வமான நன்றிகளை மனதாரத் தெரிவித்துக் கொண்டான். தன் வளமான எதிர் காலத்திற்காக மிகவும் புத்திசாலித்தனமாகத் திட்டமிட்டிருந்த தன் தாயின் அன்பினை நினைத்துக் கண்ணீர் வடித்தான். ''அம்மா! நீ என் மீது வைத்திருந்த நம்பிக்கை வீணாக வில்லை. நான் திருந்தி விட்டேன் அம்மா! இனி உழைத்து வாழ்ந்து, வாழ்வில் வெற்றியடைவேன்! நீ என் அருகில் இல்லாமல் போய் விட்டாயே!'' என்று அழுதான்.






# பயங்கரப் பள்ளத்தாக்கு

பிரம்மபுரி ந கரத்தின் எ ல்லையில் இருந்த காட்டுப் பிரதேசத்தில் மாடு களை மேய்க்கும் வாலிபன் ஒருவன் தன் வயதான தந்தையுடன் ஒரு குடிசையில் வாழ்ந்து வந்தான். சில ஆண்டுகளுக்கு முன் அவன் தாய் இறந்து விட்டதால், அவனுக்கு இருந்த ஒரே துணை அவனுடைய தந்தை மட்டுமே! மாடுகளை மேய்ப்பதும், பால் கறப்பதும் சில சமயங்களில் பாலை நகரத்திற்குக் கொண்டு சென்று விற்பதுமாக காலம் கழித்து வந்தான்.

அவர்கள் வசித்த இடத்திற்கு அருகே, வேறு யாருமில்லை. அக்கம் பக்கத்தில் கிராமங்களும் இல்லை. காட்டைச் சுற்றி மலைகள் சூழ்ந்து இருந்தன. மலைகளின் அடிவாரத்தில் பசுமையான புல்வெளிகள் உண்டு. அங்குதான் கேசவன் தினமும் தன் மாடுகளை மேய்க்க அழைத்துச் செல்வான். சில சமயங்களில் அவனுக்கு அந்த மலைகளின் மீது ஏறிப் பார்க்க ஆர்வம் ஏற்படுவதுண்டு. ஆனால் மலைகளின் மீது ஏற முயற்சிக்க வேண்டாம் என்றும், அங்கு சென்றால் உயிருக்கே ஆ பத்து ஏற்படக்கூடும் என்றும் அவன் தந்தை கூறி இருந்ததனால் அவன் தனது ஆர்வத்தை அடக்கிக் கொண்டான்.

ஒருநாள் மாடுகள் புல் மேய்ந்து கொண்டிருக்க, ஒரு மரத்தடியில் அமர்ந்த கேசவன் தன் வழக்கமான பொழுதுபோக்கான அம்பு எய்வதைத் தொடங்கினான். அப்போது ஒரு விசித்திர சத்தம் திடுக்கிட வைத்தது. சத்தம் வந்த திசையை நோக்கின கேசவன் திகைத்துப் போனான். மலைச்சரிவில் ஒரு வினோதமான மிருகம் நின்று கொண்டிருந்தது. உருவத்தில் கு திரையைப் போ பால்



இருந்தாலும் உடலில் கோடுகள் இருந்ததுடன் நெற்றியில் மிகவும் அதிசயமாக ஒரு கொம்பும் இருந்தது.

அத்தகைய ஒரு மிருகத்தை அதுநாள் வரை கேசவன் பார்த்ததும்இல்லை. கேட்டதுமில்லை. அந்த மிருகத்தால் தனக்கு ஏதாவது ஆபத்து நேரிடலாம் என்று உள்ளுணர்வு எச்சரிக்கவே, கேசவன் அதன் மீது அம்பு எய்ய முயற்சித்தான். அந்த மிருகம் கேசவனை உற்றுப் பார்த்தது. உடனே கேசவன் விரைவாக அதன் மீது அம்பை செலுத்தி விட்டான். ஆனால் கண் இமைக்கும் நேரத்தில் அந்த மிருகம் மலைச் சரிவிலிருந்து தாவிக் குதித்து விட்ட தால், அம்பின் குறி தவறி விட்டது. மீண்டும் அதன் மீது அம்பு எய்ய அவன் முயற்சி செய்கையில், மின்னல் வேகத்தில் அது கேசவன் மீது பாய்ந்து அவன் கையிலிருந்த வில்லைத் தட்டி விட்டது. அந்த மிருகத்தின் செயல் அவனை வியப்பில் ஆழ்த்தியது. ''என்னை அடிக்காதே!'' என்று சொல்வதுபோல் அவனைப் பார்த்து கெஞ்சிய அது அவனருகில் நின்று கொண்டு அவன் மேல் தன் முகத்தை வைத்துக் கொண்டு அன்புடன் தடவியது.

அது தன்னுடன் நட்பாக இருக்க விரும்புகிறது என்று கேசவனுக்குப் புரிந்தது. அது தனக்கு தீங்கு எதுவும் செய்யாது என்ற நம்பிக்கையும் ஏற்பட்டது.

கேசவனும் அதன் முதுகில் அன்புடன் தடவிக் கொடுத்தான். மகிழ்ச்சியடைந்த அது தன் தலையைத் தூக்கி பெரிதாகக் கனைத்தது. குதிரையின் பல சாதிகளில் இதுவும் ஒன்று என்று நினைத்த கேசவன், அ தன் மீ து ஏ றி ச வாரி செய்தால் எப்படி இருக்கும் என்று யோசித்தான். தான் நினைத்ததை செயலிலும் காட்டினான். கேசவன் தன் முதுகில் ஏறிக் கொண்டதும், அந்த மிருகம் உற்சாகத்துடன் நாலுகால் பாய்ச்சலில் மலைகளை நோக்கி ஓடியது. கீழே விழுந்து விழுவோம் என்று தோன்றியதால், கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். திடீரென்று அது அவனையும் சுமந்து கொண்டு மலைச் சரிவில் ஏற ஆரம்பித்ததும் கேசவனுக்கு பயம் ஏற்படத் தொடங்கியது. தன் தந்தை எச்சரித்தது ஞாபகம் வந்தது. அது தன்னை மலைகளின் உச்சிக்கே கொண்டு சென்று விட்டால், அங்குள்ள சிங்கம், புலி முதலிய துஷ்ட மிருகங்கள் தன்னை சும்மா விடாது. யார் கண்டது? மலை உச்சியில் எத்தனையோ முனிவர்கள், சித்தர்கள் இருக்கலாம்.

அவர்கள் தனக்கு ஏதாவது சாபம் கொடுக்கலாம். ராட்சசர்கள் கூட இருக்கலாம். அவர்கள் இருந்தால், தன்னைக் கடித்துக் குதறித் தின்று விடுவார்கள். இவ்வாறு பயங்கர எண்ணங்கள் தோன்றியவுடன், கேசவன் உடனே அதன் முதுகில் இருந்து கீழே குதித்தான். தானிருந்த இடத்திற்கு, மாடுகளின் அருகே ஓடிச் சென்றான். உடனே அந்த மிருகமும் அவனைப் பின்தொடர்ந்து வந்தது. இது ஏன் என் பின்னாலேயே வருகிறது? இதன் முதுகிலேயே உட்கார்ந்து இருந்ததால் நிச்சயம் அது தன்னை மலைகளின் மேல் கொண்டு சென்று இருக்கும். அப்படி சென்றிருந்தால், நம்முடைய மாடுகள் என்ன வாகும்? இவ்வாறு ஆயிரம் எண்ணங்கள் அவனை அலைக்கழித்தன.

அப்போதுதான் ஒரு அதிசயம் நடந்தது. கேசவனைப் பின் தொடர்ந்து வந்த அந்த மிருகம் திடீரென்று நின்று விட்டது. மேய்ந்து கொண்டிருந்த மாடுகளைப் பார்த்தது. அதற்கு என்ன தோன்றியதோ, என்னவோ! திடீரென மாடுகளை நோக்கி ஓடியது. ஐயோ! நமது மாடுகளை அடித்துக் கொன்று விடப் போகிறதோ என்று கேசவன் பயந்தான். ஒரு விசித்திரமான மிருகம் தங்களை நோக்கி வருவதைக் கண்ட மாடுகள் பயந்து போய் நாலா பக்கமும் சிதறி ஓடின. ஆனால் அந்த மிருகம் தானும் புல் மேய வந்தது. அதுவும் மாடுகளோடு சேர்ந்து சாதுவாக புல் தின்ன ஆரம்பித்தது. சிறிது நேரத்திலேயே மாடுகளுடன் சகஜமாக அது பழகவும் ஆரம்பித்து விட்டது.




கேசவனின் மனக்கலக்கமும் தெளிந்தது. அந்த மிருகத்தினால் தனக்கோ தன் மாடுகளுக்கோ தீங்கு எதுவும் நேராது என்று அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்து விட்டது. கேசவனும் நிம்மதியாக மரத்தடியில் அமர்ந்து கொண்டான். மாலைநேரம் வரை அது தன்னுடைய மாடுகளுடன் சேர்ந்து புல் மேயும் என்றும், பிறகு தனது இருப்பிடமான மலைக்குச் சென்றுவிடும் என்றும் கேசவன் நினைத்தான். சூரியன் அஸ்தமனமானதும் நேரம் வந்து விட்டது. கேசவன் தன் மாடுகளை ஓட்டிக் கொண்டு தன் குடிசைக்குச் செல்ல முற்பட்டான்.

மாடுகள் கேசவன் பின்னால் வரத் தொடங்கின. அந்த மிருகம் என்ன செய்கிறது என்று பார்த்த கேசவனுக்கு மறுபடியும் ஆச்சரியம் ஏற்பட்டது.

அவன் நினைத்தது போல் அது மலைகளை நோக்கிச் செல்லவில்லை. மாடுகளோடு சேர்ந்து அதுவும் கேசவன் பின்னாலேயே வந்தது. இவ்வாறு கேசவன் தன் மாடுகளுடன், அதையும் தன் குடிசைக்கு அழைத்துச் செல்ல நேரிட்டது. பசுக்களை தொழுவத்தில் கட்டிவிட்டு, கேசவன் குடிசைக்குள் போய் விட்டான்.

தான் புதிதாக ஒரு மிருகத்தை அழைத்து வந்திருப்பதைத் தன் தந்தையிடம் சொல்லலாமா வேண்டாமா என்று அவன் தயங்கினான். கடைசியில் அவரிடம் ஒன்றும் சொல்லாமல் உண்டு விட்டு உறங்கிப் போனான். மறுநாள் கேசவனின் தந்தை அவனை எழுப்பி, ''மகனே! கடவுள் தான் நம் பசுக்களைக் காப்பாற்றியிருக்கிறார். நேற்றிரவு ஓர் ஓநாய் நமது மாட்டுத் தொழுவத்தினுள் நுழைந்து விட்டது. எப்படி வந்தது என்றே தெரியவில்லை!'' என்று பரபரப்புடன் கூறினார்.

கேசவன் திடுக்கிட்டு எழுந்தான். அந்த அதிசய மிருகத்தைப் பற்றி தான் நேற்றிரவு அவரிடம் சொல்லவில்லை என்பது நினைவிற்கு வந்தது. அதைத் தான் நம் தந்தை ஓநாய் என்று தவறாகக் கூறுகிறார் என்று நினைத்தான். வயதாகி விட்டதால் அவருக்குக் கண்பார்வை சரியில்லை என்று நினைத்தான். திடீரென ஒரு சந்தேகமும் தோன்றியது. ஒருவேளை அது இரவோடு இரவாக ஓநாயாக மாறி விட்டதா?

''அப்பா! அது நமது பசுக்களைக் கொன்று விட்டதா? '' என்று பரபரப்புடன் கேட்டான்.

''இல்லை! கடவுளின் அருளினால் அப்படி எதுவும் நடக்கவில்லை. காலையில் என்னைப் பார்த்ததுமே அது ஓடி விட்டது!'' என்றார். அப்போதுதான் கேசவனுக்கு நிம்மதி ஏற்பட்டது.

''அப்பா! நீங்கள் காலையில் பார்த்தது ஓநாய் இல்லை. நேற்று மலைகளிலிருந்து ஒரு விசித்திர மிருகம்



கீழே வந்து விட்டது. அது நம்முடைய மாடுகளோடு சேர்ந்து புல் தின்றது. பார்ப்பதற்குக் குதிரைபோல் காணப் பட்டது. பிறகு நமது மாடுகளோடு சேர்ந்து அதுவும் நம்முடைய வீட்டுக்கே வந்து விட்டது. அதைத்தான் நீங்கள் பார்த்திருக்கிறீர்கள்!'' என்று விளக்கிய கேசவன், முதல் நாள் நடந்த சம்பவத்தைக் கூறினான்.

ஆனால் அதைக் கேட்ட அவன் தந்தை மிரண்டு போனார். ''மகனே! மலையிலிருந்து வந்தது என்கிறாய். அதற்கு ஒரு கொம்பு இருந்தது என்கிறாய்! ஜாக்கிரதை! அது யாரோ மாயாவி ராட்சசன் என்று தோன்றுகிறது. இல்லை மந்திரவாதியாகவும் இருக்கலாம். வேறு உருவம் தாங்கி வந்து, உன்னைத் தூக்கிக் கொண்டு போய் விடுவார்கள்!'' என்றார்.

அதைக் கேட்டு பலமாகச் சிரித்த கேசவன், ''என்னைத் தூக்கிக் கொண்டு செல்ல வேண்டுமானால், ராட்சசன் சுய உருவத்தோடு வந்தே அதை செய்யலாமே! நீங்கள் நினைப்பது தவறு அப்பா! அந்த அதிசய மிருகம் ஒரு சாதுவான பிராணிதான்!'' என்றான்.

அன்று கேசவனின் தந்தை கறந்த பாலை விற்பதற்கு நகரத்திற்குச் சென்றார். சேகவன் நீராடி, உண்டு விட்டு மாடுகளை ஓட்டிக் கொண்டு சென்றான். மாடுகளை மலை அடிவாரத்தில் புல் மேய விட்டுவிட்டு, கேசவன் வழக்கப்படி மர நிழலில் அமர்ந்தான். பிறகு வில்லில் அம்பு பூட்டி, பொழுது போக்காக மரங்களை நோக்கி அம்புகளை செலுத்தினான். திடீரென நேற்று கேட்ட அதே கனைப்பு




ஒலி அன்றும் கேட்டது. பார்த்தால், நேற்று வந்த அதே மிருகம் இன்றும் தன் முன்னங்கால்களைத் தூக்கிக் கனைத்துக் கொண்டிருந்தது. பிறகு கேசவனை நோக்கி வேகமாகவும் பாசத்துடனும் ஓடி வந்தது.

''இன்றும் வந்து விட்டாயா! வா, வா, உன் வரவு நல்வரவு ஆகுக!'' என்று கேசவன் வரவேற்றதும், அது 'நன்றி' என்று சொல்வது போல் தலையை ஆட்டியது. மறுகணமே இது ஒரு ராட்சசனாக இருக்குமோ என்ற சந்தேகமும் உண்டாகியது. அந்த மிருகம் மீண்டும் மாடுகள் புல் மேயும் இடத்திற்குச் சென்று விட்டது. கேசவன் மீண்டும் அம்பு விடத் தொடங்கினான்.

அவ்வாறு எத்தனை நேரம் அம்புகள் எய்தானோ, அவனுக்கே தெரியவில்லை. திடீரென குதிரைகளின் குளம்பொலிக் கேட்டுத் திரும்பினான்.

இரு குதிரைகளில் ஆயுதம் தாங்கிய வீரர்கள் வந்தனர். அவர்கள் கேசவன் அருகே வந்து தங்கள் குதிரைகளை நிறுத்தினர். அவர்களுள் ஒருவன் மிக ஆடம்பரமாக உடையணிந்து இருக்க, மற்றவன் மிகவும் சாதாரண உடையில் இருந்தான்.

சாதாரண உடையிலிருந்தவன் தன் எஜமானை நோக்கி, ''மகாசேனாதிபதி! பார்த்தீர்களா இந்த ஏகலைவனை?'' என்று கேட்டான். ''இவன் ஏகலைவனா!'' என்று சேனாதிபதி என்று அழைக்கப்பட்டவன் கேசவனை அலட்சியமாகப் பார்த்தான். ''பின் ஏன் தாமதம் செய்கிறாய்? ஏகலைவனுடைய கட்டை விரலைத் துண்டித்து விடுவது தானே!'' என்றான்.

''டேய் முட்டாள்! ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கிறாய். வந்திருப்பவர் மகாசேனாதிபதி என்று தெரியாதா உனக்கு? எழுந்து நின்று அவருக்கு வணக்கம் செய்!'' என்று மற்றவன் கேசவனை அதட்டினான்.

உடனே திடுக்கிட்டு எழுந்த கேசவன், ''வணக்கம் மகாசேனாதிபதி அவர்களே!'' என்று அவனை வணங்கினான். சேனாதிபதி அலட்சியமாக, ''யார் நீ? எதற்காக அம்பு விட்டுப் பயிற்சி செய்கிறாய்? யாரைக் கொல்ல திட்டமிடுகிறாய்?'' என்று மிரட்டினான்.

''ஐயா, நான் மாடு மேய்ப்பவன்! பொழுதுபோக்கிற்காக அம்பை எய்துக் கொண்டிருப்பேன்! அவ்வளவுதான்! அதோ பாருங்கள் என் மாடுகளை! நான் தவறு ஏதும் செய்யவில்லை!'' என்று கேசவன் பணிவுடன் கூறினான்.

சேனாதிபதி மேய்ந்து கொண்டிருந்த மாடுகளைக் கண்டவன், அவற்றுடன் மேய்ந்து கொண்டிருந்த அதிசய மிருகத்தைப் பார்த்தான். உடனே மற்றவன், ''மகாசேனாபதி! பார்த்தீர்களா! அதுதான் பஞ்சகல்யாணி! தேவலோகத்துக் குதிரை!'' என்றுவியப்புடன் கத்தினான்.

''அது பஞ்சகல்யாணி போல் தெரியவில்லையே. ஒருவேளை காட்டில் உள்ள கழுதையோ என்னவோ! ஆனால் பார்க்க குதிரை மாதிரிதான் உள்ளது. அதுவும் வினோதமான குதிரை. இத்தகைய குதிரையை நான் இதுவரை பார்த்ததேயில்லை. சரி, நீ சென்று அதை இழுத்துவா! அதை நாம் கூட்டிக்கொண்டு செல்வோம்!'' என்றான். (தொடரும்)





நவீன வேதாளக் கதை

# சுவர்ண ரேகா

**த**ன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்திலேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழேயிறங்கி அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் சிரித்துக் கொண்டே, ''மன்னா! தனது லட்சியத்தை அடைய நீ எடுக்கும் முயற்சிகளைப் பாராட்டுகிறேன். ஆனால் தனது லட்சியம் கைகூடும் வேளையில், அதை கை நழுவ விடும் சிலரும் உள்ளனர். அப்படிப்பட்ட ஒருவனான மயூரவர்மன் என்னும் மன்னனுடைய கதையை நான் உனக்குக் கூறுகிறேன் கேள்!'' என்றது.



அவந்தி ராஜ்ஜியத்தை ஆண்டு வந்த மயூரவர்மன் ஒருநாள் வேட்டை யாடத் தன் பரிவாரங் களுடன் காட்டை நோக்கிச் சென்றான். ஒரு மானைத் துரத்திக் கொண்டு குதிரையில் விரைவாகச் சென்ற போது, தன் பரிவாங்களை விட்டுப் பிரிந்து சென்று விட்டான். மானும் தப்பி ஓடி விட்டது. களைப்படைந்த மயூரவர்மன் ஒரு மரத்தடியில் தன் வில்லையும் அம்புகளையும் வைத்து விட்டு அருகிலேயே அமர்ந்தான். அப்போது அந்த மரக்கிளைகளில் பதுங்கியிருந்த சிறுத்தை ஒன்று, திடீரென அவன் மீது பாய்ந்தது. தன் வில்லையும் அம்புகளையும் எடுப்பதற்குக் கூட அவனுக்கு அவகாசமேயில்லை. ஆனால் சிறிதும் பதற்றமடையாமல் தன் கைகளா லேயே சிறுத்தையுடன் சண்டை யிட்டு, அதன் கழுத்தை நெறித்துக் கொன்று விட்டான். ஆனால் சண்டையில் காயமுற்ற அவன் மயகக்கமடைந்தான்.

அந்தக் காட்சியை வானிலிருந்து ஒரு கந்தர்வப் பெண் உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். மயூரவர் மனின் அழகும் அவளை வெகுவாக ஈர்த்தது. உடனே அவன் அருகில் சென்று அமர்ந்து தன் கைகளால் அவனைத் தடவிக் கொடுக்க, மயூரவர்மன் உடனே மயக்கம் தெளிந்து எழுந்து விட்டான். அவன் உடலில் பட்டிருந்த காயங்களும் மாயமாக மறைந்தன. தன்னை தனது ஸ்பரிசத்தாலேயே குணமாக்கிய பெண்ணை மிகுந்த வியப்புடன் மயூரவர்மன் நோக்கினான். அவளைக் கண்ட மாத்திரத்திலேயே, அவளின் அதியற்புத அழகினால் மயூர வர்மனும் கவரப்பட்டான்.

''பெண்ணே, உனக்கு மிகவும் நன்றி. நீ யார்?'' என்று மயூரவர்மன் கேட்டான். ''நான் ஒரு கந்தர்வப் பெண். என் பெயர் சுவர்ணரேகா! வான மார்க்கமாக உலவிக் கொண்டு இருந்த போது, நீங்கள் சிறுத்தை யோடு சண்டையிடும் காட்சியைக் கண்டு மெய்மறந்து போனேன். உங்கள் வீரத்தையும், அழகையும் கண்ட உடனேயே, உங்களை என் கணவராக மனத்தில் வரித்து விட்டேன். நீங்களும் நானும் காந்தர்வ முறைப்படி இப்போதே திருமணம் செய்து கொள்ளலாம்!'' என்று தன் விருப்பத்தை வெளியிட்டாள்.



அதற்கு மயூரவர்மன், ''சுவர்ண ரேகா! நான் அவந்தி நாட்டு மன்னன். என் பெயர் மயூரவர்மன். உன்னைக் கண்டதும் நானும் உன்னிடம் என் மனத்தைப் பறி கொடுத்து விட்டேன். ஆனால் நீ நினைப்பது போல் நான் திருமணத்திற்கு அவசரப் பட வில்லை. நீயோ ஒரு கந்தர்வப் பெண். நான் பூலோக மனிதன். ஆகவே நீ நன்றாக யே ாசித்து முடிவு செய் . ஆறு மாத காலம் நாமிருவரும் பொறுத்திருப்போம். அதற்குப் பிறகும் உ ன்னால் எ ன்னை ம றக்க முடியவில்லை என்றால் சரியாக ஆறு மாதத்திற்குப் பிறகு, இதோ இந்த அசோக மரத்தடியில் வந்து எனக்காகக் காத்திரு. நான் உன்னை இங்கு வந்து சந்தித்து உன்னைத் திருமணம் செய்து கொள்கிறேன். இப்போது நீ உனது க ந்தர்வ ே லாகத்திற்குத் திரும்பிச் சென்று விடு!'' என்றான். சுவர்ணரேகாவும் மயூரவர்மனின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு விடை பெற்றுச் சென்றாள்.

தனது க ந்தர்வ ே லாகத்திற்குத் திரும்பிச் சென்ற பிறகும், சுவர்ண ரேகா மயூரவர்மனை ஒரு கணமும் மறக்கவில்லை. ஆறுமாதங்கள் கழிந்ததும் பௌர்ணமி இரவன்று சுவர்ணரேகா பூலோகத்தை அடைந்து, மயூரவர்மன் தன்னை சந்திப்பதாகச் சொல்லியிருந்த அசோக மரத்தின் அடியில் வந்து நின்றாள். ஆனால் மயூரவர்மன் அங்கு வந்து சேராததால் அருகிலுள்ள ஒரு குளத்தில் நீராடுவதற்கு தன் கழுத்தில் அணிந்து இருந்த சக்தி மிக்க ரத்தினமாலையைக் கழற்றி ஒரு செடியின் கிளையில் மாட்டிவிட்டு குளத்தில் இறங்கினாள். நீராடி முடித்த பிறகு குளத்தைவிட்டு வெளியே வந்த சுவர்ணரேகா அதிர்ச்சியடைந்தாள். அவள் கழற்றி வைத்திருந்த ரத்தினமாலையை வேறொரு பெண் தன் கழுத்தில் அணிந்து அழகு பார்த்துக் கொண்டு இருந்தாள். இதனால் கோபங்கொண்ட சுவர்ணரேகா அவளிடம், ''யார் நீ? என் மாலையை நீ ஏன் அணிந்து கொள்கிறாய்?'' என்று கேட்டாள்.

அதற்கு அந்தப்பெண், ''என் பெயர் காதம்பரி. நான் பக்கத்து கிராமத்தைச் சேர்ந்தவள். இந்த மாலையை செடியில் பார்த்தேன். அழகாக இருந்ததால் எடுத்து அணிந்து கொண்டேன். அது உன்னுடையது என்று எனக்குத் தெரியாது'' என்றாள்.



''அந்த ரத்தினமாலை அபூர்வமான சக்தி வாய்ந்தது. அதை அணியும் தகுதி உனக்குக் கிடையாது!'' என்று சுவர்ணரேகா சீறினாள். ''நான் தரமாட்டேன். இதை அணிந்தால், நான் மிக அழகாகத் திகழ்கிறேன். இந்தக் கோலத்தில் மயூரவர்மர் என்னைப் பார்த்தால், திருமணம் செய்து கொண்டு விடுவார்'' என்றாள்.

இதைக் கேட்டதும் சுவர்ணரேகா பலமாக சிரித்தபடி, ''வீணாகக் கனவு காணாதே!'' என்றாள். ''இல்லை என் கனவு வீண் போகாது. நான் கட்டாயம் மன்னர் மயூரவர்மரை மணப்பேன். அதற்காகத்தான் அ ரண்மனையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறேன். நான் மணந்தால் அவரைத்தான் மணப்பேன் என்று அனைவரிடமும் சபதம் செய்து விட்டுத்தான் வந்து இருக்கிறேன்'' என்றாள் காதம்பரி.

சுவர்ணரேகாவிற்கு அவளுடைய சொற்களைக் கேட்க கேட்க கோபமும், சிரிப்பும் சேர்ந்து வந்தன. ''காதம்பரி! மயூரவர்மர் என்னைத் திருமணம் செய்து கொள்வதாக வாக்களித்துள்ளார். அதோ, அந்த அசோக மரத்தின் அருகே சற்று நேரத்தில் அவர் வந்து விடுவார். வந்ததும் என்னை அழைத்துக் கொ ண்டு சென்று விடுவார்!'' என்றாள் சுவர்ணரேகா.

இதைக் கேட்டதும் காதம்பரியின் மனத்தில் பலவிதமான எண்ணங்கள் உருவாயின. தனக்குப் போட்டியாக முளைத்துள்ள சுவர்ணரேகாவை தன் பாதையிலிருந்து ஒரேயடியாக அகற்றி விடத் தீர்மானித்தாள். உடனே சுவர்ணரேகாவை நோக்கி ''இந்த ரத்தினமாலை நீ சொல்வதுபோல் சக்தி உள்ளதென்றால் உன்னை இந்த நிமிடமே ஒரு கிளியாக மாற்றி விடும்'' என்று ரத்தின மாலையைத் தொட்டவாறு கூறினாள்.

அடுத்தகணமே, சுவர்ணரேகா ஒரு கிளியாக மாறினாள். காதம்பரி சுவர்ணரேகாவின் உருவத்தைப் பெற்றாள். உடனே அவள் அசோக மரத்தின் அருகில் செல்ல மயூரவர்மன் அங்கு வந்து சேர்ந்தான். காதம்பரியை சுவர்ணரேகா எ ன்று நி னைத்துக் கொண்ட மயூரவர்மன் அவள் கரங்களை அன் புடன் பற்றிக் கொண்டு, திருமணம் புரிவதற்காக தலைநகருக்கு அழைத்துச் சென்றான்.

இருவருக்கும் இனிதே திருமணம் நடந்தது. காதம்பரி அவந்திபுரத்து

மகாராணியானாள். கிளியாக மாறிய சுவர்ணரேகா ஒரு வேடன் விரித்திருந்த வலையில் சிக்கியது.

வேடன், வ லையில் சி க்கிய கிளியை ஒரு வித்தைக்காரனுக்கு விற்று விட்டான். அது சாதாரணக் கிளியல்ல என்று வித்தைக்காரன் விரைவிலேயே தெரிந்து கொண்டான். கிளி அவனிடம் தான் ஏமாற்றப்பட்ட கதையை கூறியது. அதன்மீது இரக்கம் கொண்ட வித்தைக்காரன் கிளியை எடுத்துக் கொண்டு அரண்மனையை அடைந்தான்.

தன் கிளி அபூர்வமான கிளி என்றும், நன்றாகப் பேசும் என்றும் காவலர்களிடம் கெஞ்சிக் கூத்தாடி, மன்னரின் முன் வித்தை காட்ட அந்த வித்தைக்காரன் அனுமதி பெற்றுக் கொண்டான். தர்பாரில் மயூரவர்மன் தன் புது மனைவியுடன் வீற்றிருக்க, மந்திரிகள் ப டைத்தலைவர்கள் இன்னும் பல முக்கியஸ்தர்கள் அமர்ந்திருக்க, வித்தைக்காரன் தன் கிளி வித்தைகளை மன்னன் முன் காட்டினான். பல சர்க்கஸ் வித்தைகளை காட்டி கிளி மன்னனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. பிறகு மனிதர்களைப் போல் மிகத் தெளிவாக பேசியவுடன் மயூரவர்மனுக்கு கிளியை மிகவும் பிடித்து விட்டது. கிளியின் பேச்சை மிகவும் ரசித்த மன்னன் க ாதம்பரியின் க ழுத்தில் இருந்த ரத்தின மாலையைக் கழற்றி கிளியின் கழுத்தில் போட்டான். அடுத்த கணமே, அதற்கு சுய உருவம் ஏற்பட, காதம்பரியும் பழைய



உருவத்தைப் பெற்றாள். தன் சதிவேலை அம்பலமானதை அறிந்த காதம்பரி உப்பரிகையில் இருந்து கீழே விழுந்து தற்கொலை செய்து கொண்டாள். உண்மை தெரிந்த மயூரவர்மனுக்கு அதிர்ச்சியிலிருந்து மீளவே சில நிமிடங்கள் ஆயின.

''மன்னா! நான்தான் உண்மையான சுவர்ணரேகா! இப்போது என்னைத் திருமணம் செய்து கொள்ளுங்கள்!'' என்று சுவர்ணரேகா மன்னனை வேண்டிக் கொண்டாள். வெகுநேரம் யோசித்த பிறகு மயூரவர்மன் சுவர்ணரேகாவிடம், ''என்னை மன்னித்து விடு! மானிட இனத்தைச் சேர்ந்த எனக்கும் கந்தர்வப் பெண்ணான உனக்கும் பொருத்தம் என்றுமே ஏற்படாது. நடந்ததை மறந்துவிடு!'' என்றான். சிலையாக நின்றிருந்த

சுவர்ணரேகா, பிறகு மௌனமாகத் திரும்பிச் சென்று தன் கந்தர்வ லோகத்தை அடைந்தாள்.

இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம், ''மன்னா! மன்னன் மயூரவர்மன் ஏன் சுவர்ண ரேகாவை ஏற்றுக் கொள்ள மறுத்தான்? மன்னன் தேவலோக பெண்ணான சுவர்ணரேகாவை விரும்பினானா இல்லையா? அவன் அவளை விரும்பாததால் அவளிடம் இருந்து தப்பிப்பதற்காக ஆறு மாத கால அவகாசம் பெற்றுக் கொண்டானா? முன்பே அவன் சுவர்ணரேகாவை நிராகரித்திருந்தால் அவள் இந்த அளவிற்குத் துன்பத்திற்கு ஆளாகி இருக்கமாட்டாள். என் கேள்விகளுக்கு பதில் தெரிந்தும் நீ மௌனமாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்குநூறாகும்'' என்றது.

அதற்கு விக்கிரமன், ''மன்னன் மயூரவர்மன் சுவர்ணரேகா மீது அளவு கடந்த அன்பு வைத்திருந்தான் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆறு மாத கால அவகாசம், சுவர்ண ரேகாவிற்கு மயூரவர்மன் மீதுள்ள அன்பை தீர்மானிக்க மட்டும் இல்லாமல் அவனுக்கும் சேர்த்துத் தான். இந்த அவகாசத்தில் தன் அன்பையும் பரிசோதித்துக் கொள்ள விரும்பினான். கால அவகாசம் முடிந்த பிறகு அவன் சுவர்ண ரேகாவை மணப்பதற்கு அசோக மரத்திற்குச் சென்றான். ஆனால் அவன் கெட்ட நேரம் காதம்பரியின் வடிவில் வந்தது. வெளித் தோற்றத்தைக் கண்டு மயங்கியதால் தான் அவனுக்கு இந்த நிலை ஏற்பட்டது. மறுபடியும் அதே தவறு நிகழ்ந்து விடக் கூடாது என்பதற்காகத்தான் சுவர்ணரேகாவை மயூரவர்மன் நிராகரித்தான். இது அவனுடைய நல்லொழுக்கத்தைக் காட்டுகிறது. மன்னனின் மனத்தை அறிந்தே சுவர்ணரேகா கந்தர்வ லோகத்திற்குத் திரும்பினாள்'' என்றான்.

விக்கிரமனது சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே, வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.






# போலாவின் பிறப்பிடம்



**ச**துரங்கம், கபடி, ஹாக்கி போன்ற விளையாட்டுகள் இந்தியாவில்தான் தொடங்கியது. அந்த வரிசையில் போலோ விளையாட்டையும் சேர்த்துக் கொள்ளலாம். இராமபிரானும், அவருடைய சகோதரர்களும் சிறுபருவத்தில் 'சௌகன்' என்ற பெயரில் போலோ விளையாடியதாகக் கூறப்படுகிறது. இன்று விளையாடப் படும் போலோ பாரசீக நாட்டிலிருந்து மற்ற நாடுகளுக்குப் பரவியது. ஆனால் இது மணிப்பூரில் தான் தோன்றியது. மூங்கிலின் வேர்களிலிருந்து செய்யப்படும் பந்தான 'புலா'வை குதிரைச் சவாரி செய்து கொண்டே, ஒரு குச்சியால் அடித்து அணிக்கு நான்கு நபர்கள் என, இரு அணிகள் விளையாடுவது உண்டு. 17ஆம், 18ஆம் நூற்றாண்டுகளில் அரச குடும்பத்தினரும், பெரிய செல்வர்களும் போலோ விளையாடி வந்தனர். ஆனால் இன்று பெரும்பாலும் ராணுவ அதிகாரிகள் மட்டுமே போலோ விளையாடுகின்றனர்.

# ஓராண்டின் நாள்கள்



**ஓ**ராண்டில் 365 நாள்கள் என்றும், லீப் ஆண்டுகளில் 366 நாள்கள் என்றும் ஒரு குழந்தை கூட சொல்லி விடும். சுமார் 1500 ஆண்டுகளுக்கு முன்பு, பாரதத்தைச் சேர்ந்த வானியல் நிபுணர் பாஸ்கராச்சாரியா பூமி சூரியனைச் சுற்றி வர 365.258756484 நாள்கள் ஆகும் என்று கணக்கிட்டு இருந்தார். பாரத கணித மேதை ஆர்யப்பட்டா தான் பூஜ்யம் என்ற எண்ணைக் கண்டு பிடித்தார். அதுவரை 1 முதல் 9 வரையே எண்கள் வழக்கில் இருந்தன.



# மாமியார் ஒரு மகாலட்சுமி

**சு**கன்யாவிற்குத் திருமணம் முடிந்து கணவன் வீ டு செ சல்லும்போது, அவளுடைய தாய், ''இனிமேல் உன் மாமியார்தான் உனக்குத் தாய்! அவரிடம் அன்புடன் நடந்து கொள்'' என்று அறிவுரை கூறினாள். சுகன்யாவும் அதன் படியே நடந்து கொண்டாள். தனது மருமகளின் நடத்தையைக் கண்டு மாமியார் பத்மாவதி மிகவும் மகிழ்ச்சியுற்றாள்.

பத்மாவதி வீட்டை மிகவும் நேர்த்தியாக பராமரித்து வந்தாள். சமையலும் அவ ளுக்கு கை தேர்ந்த கலையாக இருந்தது. இவற்றைத் தவிர, இனிய குரலில் நன்றாகப் பாடவும் செய்தாள். த ன் மாமியாரின் அற்புதத் திறமைகளைக் கண்டு வியந்த சுகன்யா தன் மாமியாரை ''அம்மா, பார்ப்பதற்கு நீங்கள் சாட்சாத் மகாலட்சுமியைப் போல் இருக்கிறீர்கள். அதே சமயம் சரஸ்வதி தேவியைப்போல், சகல கலைகளிலும் வல்லவராகவும் இருக்கிறீர்கள். உண்மையைச் சொல்லப் போனால், என் தாய்க்கு இந்தளவிற்கு விஷயங்கள் தெரியாது'' என்று புகழ்ந்தாள்.

மருமகளின் புகழ்ச்சியினால் பெருமிதம் அ டைந்த ப த்மாவதி. ''உன்னுடைய தாய்க்கு மற்ற விஷயங்கள் தெரியாமலிருக்கலாம். ஆனால் உன்னை நன்கு வளர்த் திருக்கிறாள்,'' என்று சொன்னாள். இவ்வாறு இருவரும் ஒருவருக் கொருவர் அடிக்கடி புகழ் மாலைகள் சூட்டிக் கொள்வதுண்டு.

ஆனால் சில நாள்களில் சுகன்யாவின் கணவன் ராகவனுக்கு ராஜதர்பாரில் நல்ல வேலை கிடைத்து விட்டது. சுகன்யாவும், ராகவனும் தங்கள் கிராமத்தை விடுத்துத் தலைநகர் நோக்கிச் சென்றனர்.

சுகன்யாவும், ராகவனும் பத்மா வதியை விட்டுப் பிரிந்து நான்கு ஆண்டுகள் கழிந்தன. திருமணமான

-செந்தில் குமார்-

முதல் ஆண்டே சுகன்யாவிற்கு ஒரு பெண் குழந்தை பிறக்க, அதற்குசித்ரா என்று பெயரிட்டனர். கிராமத்தில் ராகவனுடைய தம்பியான கணபதி தன் தாய், தந்தையுடன் வசித்து வந்தான். அவனுக்கும் திருமணமாகி, இளைய மருமகளான சுமதி அந்த வீட்டில் வசித்து வரலானாள். மாமியார் தன் மூத்த மருமகளைப் பற்றி வாய் ஓயாமல் புகழ்வதைக் கேட்டு, பொறுமை இழந்த சுமதி ஒருநாள் ''சுகன்யா இந்த வீட்டில் இருக்கும் வரை அவ்வாறு முகஸ்துதி செய்திருக்கலாம். இப்போது உங்களை எவ்வாறு நினைத்துக் கொண்டிருக்கிறாளோ, யார் கண்டது!'' என்று கேட்டு விட்டாள்.

பத்மாவதிக்கு சுமதி சொன்னது 'சுருக்' என தைத்தது. உடனே தன் கணவரை வற்புறுத்தி, தன் குடும்பத்துடன் ராகவன் வீட்டிற்குப் புறப்பட்டுச் சென்றாள். சுகன்யா அனைவரையும் வரவேற்றாள். பத்மாவதி தன் பேத்தி நிர்மலாவிடம் ''நான்தான் உன் பாட்டி'' என்று அறிமுகம் செய்து கொண்டாள்.

உடனே அவள் ''அடடா! என் அம்மா உங்களைப்பற்றி அடிக்கடி என்னிடமும் சொல்லியிருக்கிறாள். அம்மா சொன்னபடி, நீங்கள் கறுப்பாக குண்டாக இருப்பீர்கள் என்று நினைத்தேன். நீங்கள் சிவப்பாக, ஒல்லியாக இருக்கிறீர்கள்,'' என்று சொன்னதும், பத்மாவதிக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. உடனே இளைய மருமகள் சுமதி தொலைவிலிருந்தபடி சைகையால் ''பார்த்தீர்களா!'' என்றாள்.

ஆனால் நிர்மலா சொன்னதைக் கேட்டு சுகன்யா சிரித்தாள். அப்போது சமையல் அறையிலிருந்து கறுப்பாக, பருத்த சரீரம் கொண்ட சமையற்காரி வெளியில் வந்து, ''அம்மா, சமையல் தயார்!'' என்று அறிவித்தாள். ''இவ்வளவு விரைவாக சமையலை முடித்து விட்டாயா? சபாஷ் மகாலட்சுமி!'' என்று சுகன்யா அவளைப் பாராட்டினாள். உடனே பத்மாவதிக்கு மட்டுமல்லாமல் அனைவருக்கும் உண்மை புரிந்து விட்டது. தன் பேத்தியை வாரி அணைத்து அன்புடன் முத்தமிட்டாள்.



# செய்திச்சுடர்

## புலிகளுக்கு இறங்குமுகம்



**ரா**ஜஸ்தானிலுள்ள சார்சிகா சரணாலயத்தில் சமீபத்தில் 26 புலிகள் காணாமற்போயின என்ற செய்தி வன இலாகா அதிகாரி களை அதிர்ச்சியடையச் செய்தது. மொத்தப் புலிகள் மற்ற காட்டு மிருகங்களின் எண்ணிக்கையைக் க ணக்கிட மு டிவு செய்யப்பட்டிருக்கிறது. இப்பணி நவம்பர் மாதம் தொடங்கி, 2006, பிப்ரவரி மாதம் வரை நடக்கும். இந்தியாவில் சுமார் 37,800 சதுர கிலோமீட்டர் பரப்பளவில் நிறைந்துள்ள 27 வனவிலங்கு சரணாலயங்களில் புலிகளின் எண்ணிக்கை 3,600ஆக இருக்கும் என்று ஊகிக்கப்படுகிறது. இது 1987ஆம் ஆண்டு இருந்ததை விட 730 குறைவாகும். சுதந்திரம் அடைவதற்கு முன், 40,000 புலிகள் இருந்தனவாம்!

## சீனாவை மிஞ்சும் இந்தியா



**ம**க்கள் தொகையில் இந்தியா சீனாவை மிஞ்சிவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கடந்த பிப்ரவரி 2004ஆம் ஆண்டின் கணிப்பின்படி, 2050ஆம் ஆண்டில் இந்தியாவின் மக்கள் தொகை 160 கோடி ஆகி விடுமாம். சீனாவில் அப்போது 140 கோடி தான் இருக்குமாம். 2030 ஆம் ஆண்டு, இரு நாடுகளிலும் கிட்டத்தட்ட ஒரே மக்கள் தொகை இருக்குமாம்! கடந்த ஜனவரி மாதம், 6ஆம் தேதியன்று, சீனாவின் மக்கள் தொகை 130 கோடியை எட்டியது. அந்த இலக்கை எட்டிப் பிடிக்க உதவிய குழந்தை, பெய்ஜிங்கில் சாங் டாங் என்பவருக்குப் பிறந்ததாம்! ''உலகிலேயே மகிழ்ச்சியான நபர் நான்தான்!'' என்றாராம் அவர்.

அயல் நாட்டுக் கதைகள்
(கொரியா)

# கேட்ட வரம் கிடைத்தது



பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், கிரேக்கர்களும் ரோமாபுரி மக்களும் பல கடவுள்களை வழிபட்டு வந்தனர். அத்தகைய ஒரு பெண் தெய்வத்தின் பெயர் ஹீரா. கன்னிப்பெண்களுக்குத் திருமணம் முடித்து வைத்து, வளமான மணவாழ்வு தருபவளாக ஹீராவை கிரேக்கர்கள் வழிபட்டு வந்தனர்.

ஹீரா அம்மனின் கோயில் ஒரு மலையின் மீது இருந்தது. திருவிழா தினங்களில், ஏராளமான பெண்கள், குறிப்பாக கன்னிப்பெண்கள் அங்கு வந்து வழிபடுவதுண்டு. அம்மனுக்குரிய பூசைகளை ஒரு தலைமைப் பெண் பூசாரி செய்து வந்தாள்.

கோயிலின் வருடாந்திரத் திருவிழா நடப்பதற்கு சில நாள்கள் முன் தலைமைப் பெண் பூசாரி தனது சொந்த கிராமத்திற்குச் சென்றிருந்தாள். தன்னுடன் தனது இரண்டு பிள்ளை களையும் அழைத்துச் சென்றிருந்தாள். ஆனால் சென்ற இடத்தில் நோய் வாய்ப்பட்டதால், அவளால் உடனே கோயிலுக்குத் திரும்ப முடியவில்லை. அவளுக்கு உடல் ஓரளவு குணமான போது கோயில் திருவிழாவிற்கு இன்னும் ஒரு நாள் மட்டும் மிஞ்சிஇருந்தது.

முற்றிலும் உடல் குணமடையாதிருந்த போதிலும், வருடாந்திரத் திருவிழா வன்று கோயிலில் இருந்தாக வேண்டிய கட்டாயத்தால், பெண் பூசாரி தன் கிராமத்தை விட்டுக் கிளம்பத் தயாரானாள். கோயில் அவளுடைய கிராமத்திலிருந்து வெகு தொலைவில் இருந்ததாலும் உடல் பலவீனமாக இருந்ததாலும், அவளால் நடந்து கோயிலுக்குச் செல்ல இயலவில்லை. அவளுடைய பிள்ளைகள் இருவரால் வண்டியை ஏற்பாடு செய்ய முடிந்ததே தவிர குதிரையையோ மாட்டையோ ஏற்பாடு செய்ய முடியவில்லை.

திருவிழாவன்று தலைமைப் பெண் பூசாரிணியான அவள் அங்கு இருக்கத் தவறினால், சடங்குகள் எதுவும் நடைபெறாது. ஏராளமான பக்தைகள் ஏமாந்து போவார்கள். அம்மனின் தீராத கோபத்திற்கும் ஆளாக நேரிடும். என்னசெய்வது என்று புரியாமல் புழுவாய் துடித்த பெண் பூசாரி தன் பிள்ளைகளிடம் எப்பாடுபட்டாவது

குதிரைகளை ஏற்பாடு செய்ய வேண்டும் என்று உத்தரவிட்டாள்.

அவளுடைய பிள்ளைகளான பிட்டனும், கிளியோபிசும் இறுதியாக ஓர் ஏற்பாடு செய்துவிட்டு, தங்கள் வீட்டை அடைந்து தாயைப் புறப்படச் சொன்னார்கள். ''எப்படியாவது ஏதாவது ஏற்பாடு செய்துவிடுவீர்கள் என்று எனக்குத் தெரியும்!'' என்று பெருமை பொங்க அவர்களை நோக்கிக் கூறிவிட்டு, வண்டியில் அவள் ஏறினாள். வீட்டு வாயிலில் ஒரே இருட்டாக இருந்ததால், குதிரைகள் அவள் கண்களுக்குத் தெரியவில்லை. தன் பிள்ளைகளையும் வண்டியில் வருமாறு கூறினாள். ஆனால் இருவரும் வண்டியின் பின்னால் நடந்து வரப் போவதாகக் கூறி விட்டனர். ஏறி அமர்ந்ததுமே உறங்கி விட்டாள். வண்டியும் புறப்பட்டுச் சென்றது.



மறுநாள் பொழுது புலரும் வேளையில், அவள் கண் விழித்தாள். வண்டியின் பின்னால் அவள் பிள்ளை களைக் காணவில்லை. எங்கே போனார்கள் அவர்கள் என்று பதற்றத் துடன் சுற்றம் முற்றும் பார்த்த அவள் கண்களில், அவள் பிள்ளைகள் இரு வரும் வண்டியைத் தானே இழுத்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்த காட்சி தென்பட்டது. இதைக் கண்டதும் தாயின் நெஞ்சம் பதறித் துடித்தது. அதற்குள் கோயில் வந்து விட்டது.

வருடாந்திரத் திருவிழா சடங்குகள் முடிந்ததும், அவள் அம்மனை நோக்கி, ''தேவி! நான் என்ன பாக்கியம் செய்துள்ளேன்! இத்தகைய புதல்வர்கள் வேறு யாருக்காவது கிடைப்பார்களா? இரவு முழுதும் எனக்காக வண்டியை இழுத்து வந்துள்ள இவர்களுடைய பாசத்தை என்னவென்று சொல்வது? இவர்களுக்கு சோர்வு, பயம், கவலை எதுவுமே அணுகாத நிலையை அடைய வரங்கொடு!'' என்று கெஞ்சினாள்.

''அப்படியே ஆகட்டும்!'' என்ற அம்மனின் சொல் அவள் செவிகளில் விழுந்தது. அடுத்தகணம், அவளுடைய இருபிள்ளைகளும் கீழே விழுந்து சோர்வு, பயம், கவலை அனைத்தையும் மறந்த உறக்க நிலைக்குப் போய் விட்டனர். பல ஆண்டுகள் அவ்வாறு இருந்தபின் மரணத்தைத் தழுவினர். தலைமைப் பெண் பூசாரி தன் பிள்ளைகளுக்காக கேட்ட வரம் இந்த விதமாகக் கிடைத்தது.

# THE ADVENTURES OF G-man

# அண்ட்ரோமேனியா ரெப்டஉலியா பகுதி 1

வழங்குவோர் Parle-G POWER SUPPLY

Visit: www.parleproducts.com 

இது வரை நடந்த கதை : நம்முடைய உலகில் வாழும் டெர்ரோலீனுடன் யுத்தம் செய்ய மற்ற இணையான பிரபஞ்சத்திலுள்ள இரண்டு ஜீ-மென்னைச் சந்தித்து அவர்களை தனக்கு உதவும்படி ஒப்புக் கொள்ளச் செய்கிறான் ஜீ-மேன். மேலும் உதவியைப் பெறும் நோக்கத்தோடு, ஜீ-மேன் இப்போது நம்முடையதைப் போன்ற ஒரு உலகத்திற்குப் பயணம் செய்கிறான். இந்த முயற்சி நிறைவேறுமா?



இது என்ன
புது வாசனை?

மலர்ந்த பூக்களோட
வாசனை மாதிரி தோணுது.
ஆனா, முதல்ல நான்
செய்ய வேண்டியது மாறு
வேஷம் போடறதுதான்.

இது
சரியாகுமா.



DAILY
HUSBAND BRUTALLY BEATEN BY WIFE
EQUAL RIGHTS FOR MAN
ஆச்சரியமா இருக்கே. இந்த உலகத்தை ஆட்சி செய்யறது எல்லாம் பெண்களா? ஆனா, இந்த இடம் ஜீ-மேனுக்கு சரிபட்டு வராது. அது சரி, இந்த விசித்திரமான வாசனைக்கான காரணம் இப்போ புரியுது.
PRESIDENT FOR PEOPLE
VOTE FOR NANDADEVI

அப்போது...

BADOOM

எனக்கு ஒண்ணும் ஆச்சரியமா தோணலை...

பயப்பட வேண்டிய அவசியமில்லை. ஆண்களும், குழந்தைகளும் தயவு செஞ்சு பாதுகாப்பான இடத்துக்குப் போங்க. நிலைமை கட்டுப்பாட்டில இருக்கு.

ஹூம்... வெந்த புண்ணுல வேல் குத்தற மாதிரி... பெண்கள் சமாதானத்தை கொண்டு வருவாங்கன்னு நாம் நெனைக்கிறோம்.

இது மிஸ்ஸி
கோட்ஸில்லாதானே!
இவ இப்படிப்பட்ட நாசம்
செய்யும்போது, மிஸ்டர்
கோட்ஸில்லா மல்லிகைப் பூ
குளத்துல குளிச்சிகிட்டு நகத்தை
வெட்டிகிட்டிருக்காரே!

ஜீ-மேனும் இதையே
செய்வாருன்னு
தோணலை.

நான் அவங்கள காப்பாத்தப்
போகணுமா இல்ல காத்திருக்கட்டுமா...
அதோ அங்கே இருக்கான் அவன்.










பெண்கள் ஆட்சி செய்யும் இந்த உலகில் டெர்ரோலீனை எதிர்த்து யுத்தம் செய்ய ஜீ-மேனால் முடியுமா? அப்படி யுத்தம் செய்ய, ஜீ-மேனுக்கு உதவி கிடைக்குமா?

டி-டவர் வரை சென்றடைய மற்றும் டெர்ரோலீனை எதிர்த்துப் போராட ஜீ-மேனுக்கு உதவி செய்யுங்கள்.






POWER SUPPLY



Visit: www.parleproducts.com

பஞ்சாப் நாட்டுப்புறக் கதை

# உடல் இளைக்க ஒரு வழி

மன்னன் ராஜாதிராஜன் நாட்டில் பிரச்சினைகள் ஏதும் இல்லாமல் இருந்ததால் உண்பதும், குடிப்பதும், உறங்குவதுமாக இருந்தான். மன்னன் வெகு விரைவிலேயே மிகவும் பருமனாக மாறினான். அவனுடைய பருத்த சரீரத்தைக் கண்ட நாட்டு மக்களே கேலி செய்ய ஆரம்பித்தனர்.

இளவசரனாக இருந்தபோது, ராஜாதிராஜன் ஒல்லியாக அழகாக இருந்தவன்தான். அரியணையில் அமர்ந்ததும், தொடக்கத்தில் அவன் அமைச்சர்களுக்கு இடையே மிகுந்த போட்டியும், பூசலுமாக இருந்தது. திறமையான சில அமைச்சர்களை பணியிலிறுத்தி, மற்றவர்களை அவன் பதவி நீக்கம் செய்தான். பணியில் அமர்த்திய சிலரில் யாரையுமே முதல் அமைச்சர் ஆக்காமல் அதிகாரங்களை மட்டும் வழங்கி, உட்பூசலைத் தவிர்த்தான். அதற்குப் பிறகு, ஆட்சியில் அமைதி நிலவியது. பிரச்சினைகளே இல்லாத அந்த சமயத்தில் இருந்து, மன்னன் உணவு, மது ஆகிய வற்றால் பெரிதும் கவரப்பட்டு, உடல் உழைப்பையும் விடுத்து கண்டவர் ஏளனமாகப் பேசும் குண்டோதரனாக மாறினான்.

ஆனால் தன்னைக் கண்டதும் அமைச்சர்கள் தங்களுக்குள் சிரித்துக் கொள்வதையும் அதன்பின் அடக்கிக் கொள்வதையும் கவனித்த மன்னன் அவர்களில் ஒருவரை அழைத்து அவர்கள் சிரிப்பதின் காரணத்தைக் கேட்டான். ''தாங்கள் என்னை தயவு செய்து மன்னிக்க வேண்டும்!'' என்று பணிவுடன் தொடங்கிய அமைச்சர், ''தங்களுடைய பருமனான உடல் தான் காரணம்!'' என்றார்.

''ஆகா! நீ கூறுவது உண்மைதான்! ஆனால் அதற்கு என்ன செய்வது?'' என்று மன்னன் கேட்க, அமைச்சர்,



''மன்னா! நீங்கள் அளவோடு உண்டால் வளமோடு வாழலாம்!'' என்றார். ''அது மட்டும் என்னால் முடியாது!'' என்ற மன்னன் சற்று யோசித்து பி றகு, ' 'எல்லாருமே என்னைப்போல் பருமனாக இருக்க அனைவரும் இன்று முதல் வயிறு புடைக்க உண்டு பருமனாக வேண்டும். உணவுப் பொருட்களின் விலையை மலிவாக்கவும் ஆறு மாதங்களுக்குப் பிறகு எவனாவது ஒல்லியாகத் தென்பட்டால், அவன் சிறையில் அடைக்கப்படுவான்!'' என்று அறிவித்தான்.

அரசன் விதித்தக் கட்டளை நாடெங்கும் தண்டோரா போட்டு



அறிவிக்கப்பட்டது. தண்டனைக்குப் பயந்து ஒவ்வொருவரும் வயிறு புடைக்க உண்டு பருமனானார்கள். மன்னன் வீதி உலா வரும் சமயங்களில் ஊரில் உள்ள யாவரும் தன்னைப் போலவே பருமனாக இருப்பது கண்டு மகிழ்ச்சி அடைந்தான்.

ஆனால் அ வனுடைய ம கிழ்ச்சி நெடுநாள் நீடிக்கவில்லை. ஒல்லியாகவும், அழகாகவும் இருந்த அவனுடைய ஒரே மகள் மாளவிகா, இப்போது பருமனாக மாறி விட்டதைப் பார்த்ததும் அவள் உடல் இளைக்க என்ன வழி என்று அமைச்சர்களைக் கேட்டான். இளவரசிக்கு விதிவிலக்கு தர வேண்டும் என்று அமைச்சர்கள் கூறினர். ஆனால் நன்றாக உண்டு பழகி விட்ட இளவரசியால், அளவோடு உண்ண முடியவில்லை. அதனால் அவள் எடை நாளுக்கு நாள் கூடியதே தவிர குறையவில்லை.

தனது அடுத்த கட்ட நடவடிக்கையாக மன்னன் மருந்துகளின் உதவியை நாட முயற்சி செய்தான். எந்த வைத்தியன் மூலிகை மருந்துகளின் மூலம் இளவரசியி ன் உடலை இளைக்குமாறுச் செய்கிறானோ, அவனுக்கு தன்னுடைய ராஜ்ஜியத்தையே அளிப்பதுடன், இளவரசியையும் திருமணம் செய்து கொடுப்பதாக அறிவித்தான். ஆனால் தனது முயற்சியில் தவறுபவர்களுக்கு மரண தண்டனை அளிக்கப்படும் என்றும் அறிவித்தான். இதனால் நாட்டில் இருந்த வைத்தியர்கள் உயிருக்குப் பயந்து ஓடி ஒளிந்து கொண்டனர்.

நாள்கள் உருண்டோடியதே தவிர. இளவரசிக்கு சிகிச்சை அளிப்பதற்கு யாரும் முன்வரவில்லை.



ஒருநாள் காட்டில் மூலிகைகளைத் தேடிக் கொண்டு இருந்த ஓர் அயலூர்க்கார வைத்தியனை காவலர்கள் கட்டியிழுத்து வந்து மன்னனின் முன் நிறுத்தினர். அவனைக் கண்டதுமே, மன்னனுக்கு உற்சாகம் பிறந்தது. ஏனெனில் இதுவரை எந்த வைத்தியனும் முன் வராதது மட்டுமல்லாமல், புதிய வைத்தியன் மெலிந்த தேகத்தை உடையவனாகவும் இருந்தான். உடனே மன்னன், தனது மகளின் உடல் இளைக்க அவளுக்குத் தகுந்த மருந்து தந்து சிகிச்சை செய்யுமாறு கேட்டுக் கொண்டான். ஆனால் வைத்தியன் மறுத்துவிட்டான்.

''மன்னா! நீங்களே பருமனாக இருக்கிறீர்கள். இந்த ஊரில் அனைவரும் பருமனாக உள்ளனர். அப்போது இங்கே ஏதோ ஒன்று தவறாக நடக்கிறது என்று தோன்றுகிறது. என்னால் இது முடியாது! என்னை விட்டு விடுங்கள்!'' என்று தப்பிக்கப் பார்த்தான். ஆனால் மன்னன் அவனை விடவில்லை. ''நீ மட்டும் சிகிச்சையில் வெற்றி அடைந்தால், உனக்காக என்ன காத்திருக்கிறது என்று எண்ணிப்பார்! இந்த சிம்மாசனமும், இளவரசியும் உனக்கே சொந்தம் ஆவார்கள்!'' என்று பலவந்தமாக இழுத்துச் சென்று இளவரசியிடம் அழைத்துச் சென்றான்.

நீண்ட நேரம் இளவரசியைப் பரிசோதித்த அந்த வாலிப வைத்தியன், ''மன்னா! இளவரசிக்கு சிகிச்சை அளித்துப் பயனில்லை. இன்னும் சரியாக நூற்றி மூன்று நாள்கள் மட்டுமே அவள் உயிரோடு இருப்பாள்,'' என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டான். அதைக்கேட்டு அனைவரும் திடுக்கிட்டனர்.

''வைத்தியனே! உன்னை இப்போது உயிரோடு விட்டு விடுகிறேன். ஆனால் உன்னுடைய வாக்குப்படி நூற்றி மூன்று நாள்களில் இளவரசி இறக்காவிடில், உன் உயிர் உன் உடலை விட்டுப் பிரிந்து விடும். அதுவரை உன்னை சிறையில் அடைக்கிறேன்!'' என்று சொன்ன வைத்தியனை சிறையில் அடைத்து விட்டான்.

தான் இன்னும் நூற்று மூன்று



நாள்கள் தான் உயிரோடு இருப்போம் என்ற செய்தியைக் கேட்டு மாளவிகா நிலைகுலைந்து போனாள். அன்று முதல் அவளுக்குசாப்பிடவே தோன்ற வில்லை. தன் மகளின் நிலையைக் கண்டு இடிந்து போன மன்னனும் அறுசுவை விருந்துகளை அறவே தவிர்த்து, பட்டினி கிடக்கலானான்.

இவ்வாறு நூறு நாள்கள் கழிந்தன. இப்போதெல்லாம், மன்னனுக்குத் தன் மகளைப் பார்த்தாலே துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. அவளை பார்ப்பதைக் கூடக் குறைத்துக் கொண்டான். ஆனால் நூற்றி ஒன்றாவது நாள், இளவரசியின் தோழிகள் மன்னனிடம் வந்து, ''மகாராஜா! மாளவிகா இன்று உற்சாகத்துடன் இருக்கிறாள். அவளுக்குப் புத்துணர்ச்சி உண்டாகியுள்ளது, முன்பைவிட இப்போது தான் சுறுசுறுப்பாகவும் ஆரோக்கியத்துடனும் இருப்பதாக உணர்கிறாள்,'' என்று அறிவித்தனர். மன்னனால் அந்த செய்தியை நம்பவே முடியவில்லை.

மறுநாள் ஒரு பெண் வந்து, ''மகாராஜா! மாளவிகா பட்டினி கிடப்பதை நிறுத்தி விட்டாள். இன்று ஆரஞ்சு சாறு குடித்தாள்!'' என்று கூறினாள். நூற்றி மூன்றாவது நாள் ஒருத்தி, ''பல நாள்களுக்குப் பிறகு, இன்று முழுமனதுடன் உணவு உண்டாள். தனக்கு உடலில் எந்த நோயும் இல்லையென்றும், தான் பூரண நலத்துடன் இருப்பதாகவும் கூறுகிறாள்'' என்றாள். அவர்களுக் கெல்லாம் மன்னன் பரிசளித்தான். இருப்பினும், 'நாளை என் மகள் இருப்பாளா?' என தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள். மறுநாள் அதிகாலையிலேயே எழுந்த மன்னன், நேராக மாளவிகாவை நோக்கிச் செல்ல தயாரான போது, அவளே தன் தோழிகளுடன் தந்தையைக் காண வந்தாள். ''மாளவிகா!'' என்று மகிழ்ச்சியில் கூவிய மன்னன், ''அந்த வைத்தியன் கொடுத்த கெடு முடிந்து விட்டது. உனக்கு ஒன்றும் ஆக வில்லை. இனி நீ நீண்ட ஆயுளுடன் இருப்பாய்!'' என்று தன் மகளை பாசத்துடன் அணைத்துக் கொண்டான்.

''தந்தையே! அந்த வைத்தியனை நான் பார்க்க வேண்டுமே!'' என்றாள் மாளவிகா. ''கட்டாயம் பார்க்கலாம்! ஆனால் நீ அவனைப் பார்த்த பிறகு, அவனுக்கு மரண தண்டனை விதிக்கப் போகிறேன்!'' என்றான் மன்னன். ''ஆனால் நான்தான்

உயிருடன் இருக்கிறேனே! என்றாள் மாளவிகா.

சற்று நேரத்தில், வைத்தியனைக் காவலர்கள் சி றையில் இ ருந்து அழைத்து வந்து நிறுத்தினர். அவனை ஏளனத்துடன் பார்த்த மன்னன், ''முட்டாள் வைத்தியனே! பார்த்தாயா? உன் தவறானகணிப்பை!'' என்றான்.

ஆனால் சிறிதும் கலவரம் அடையாமல் அந்த வைத்தியன் மன்னனை நோக்கி ''மகாராஜா! இளவரசி முன்பு இருந்ததை விட, இப்போது அவள் எவ்வளவு அழகாக, ஒல்லியாகத் திகழ்கிறாள் என்று கவனித்தீர்களா, உங்களையும் சற்று நீங்களே நன்றாகப் பாருங்கள்! முன்பிருந்ததைவிட உடல் இளைத்து, நீங்கள் சுறுசுறுப்பாக இருக்கிறீர்கள் அல்லவா?'' என்றான்.

தன் மகளையும், தன்னையும் அப்போதுதான் நன்றாக கவனித்த மன்னன், ''அட! நீ சொல்வது உ ண்மைதான்! ஆனால் இது எப்படி நடந்தது?'' என்றான்.

''மகாராஜா! அளவிற்கு மீறி உண்டதால்தான், உங்களுக்கும் இளவரசிக்கும் உடல் மிகவும் பருமனாகி விட்டிருந்தது. கொழுப்பு நிறைந்த உணவைத் தவிர்த்து, உங்கள் இருவரையும் அளவோடு சாப்பிட வைக்க, நான் செய்த தந்திரம்தான் இது! இப்போதாவது உண்மையை அறிந்து நீங்கள் விதித்துள்ள கட்டளையை வாபஸ் வாங்குங்கள்!'' என்றான் வைத்தியன்.

''என் கண்களைத் திறந்த உனக்கு மிகவும் நன்றி! நான் பிறப்பித்தக் கட்டளையை ரத்து செய்கிறேன். அதேபோல் நான் வாக்குறுதி அளித்தபடி, இளவரசியை உனக்கு மணம் முடிப்பேன்,'' என்றான் மன்னன்.

இளவரசிக்கும் வைத்தியனுக்கும் விரைவிலேயே திருமணம் முடிந்தது. வைத்தியன் பட்டத்து இளவரசனாக அறிவிக்கப்பட்டான். நாட்டு மக்கள் மீண்டும் மகிழ்ச்சியுடன் வாழத் தொடங்கினர்.



# தாய்ப்பாசம்

சங்காபுரம், மங்காபுரம் என்று இரண்டு கிராமங்கள் அடுத்தடுத்து அமைந்திருந்தன. சங்காபுரம் கிராமத்து மக்களுக்குக் காரமான உணவு வகைகள் மிகவும் பிடிக்கும். ஆனால் மங்காபுரத்து மக்கள் இனிப்புப் பண்டங்களையே விரும்பினர். சங்காபுரத்தைச் சேர்ந்த பத்மா, மங்காபுரத்தைச் சேர்ந்த சந்திரனைத் திருமணம் செய்து கொண்டு கணவன் வீட்டிற்குச் சென்றாள். பிறந்த வீட்டில் காரசாரமாகச் சாப்பிட்டுப் பழக்கப்பட்ட பத்மாவிற்கு கணவன் வீட்டு இனிப்புப் பண்டங்கள் பிடிக்கவேயில்லை. அதனால் தன் தாயிடம் இதைப் பற்றி பத்மா குறை சொல்வதுண்டு. பத்மாவின் தாயும் அவளுக்குப் பிடித்த கார ஊறுகாய், சட்டினி ஆகியவற்றை அவளுக்குச் செய்து கொடுப்பாள்.

வேலை நிமித்தமாக, சந்திரன் மயூரபுரிக்குச் செல்கையில் பத்மாவையும் உடன் அழைத்துச் சென்று விட்டான். மயூரபுரி வெகு தொலைவில் இருந்ததால், பத்மாவால் முன்புபோல் தன் தாய் வீட்டிற்குச் செல்ல முடியவில்லை. இதற்கிடையில் பத்மாவிற்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.

நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு, பத்மாவும் சந்திரனும் தங்கள் மகளுடன் மங்காபுரம் திரும்பினர். பல ஆண்டுகள் பிரிந்திருந்த தன் மகளைச் சந்திக்க, பத்மாவின் பெற்றோர் ஊறுகாய், மற்றும் பலகார உணவுகளை எடுத்து மங்காபுரம் வந்திருந்தனர். ஆனால் அவற்றைக் கண்டவுடனே பத்மா, ''என்னுடைய குழந்தை காரம் சாப்பிட மாட்டாள். அவளுக்கு இனிப்புதான் பிடிக்கும். நானும் அவளுக்காக மாறிவிட்டேன். நீங்களும் வயதான காலத்தில் நிறைய காரம் சாப்பிடாதீர்கள்'' என்றாள்.

அதற்கு பத்மாவின் தந்தை, ''பத்மா! நீ உன் மகளுக்காக இவ்வாறு மாறிவிட்டாய். அதுபோல் உன் தாயும் உனக்காக இவற்றைக் கொண்டு வந்திருக்கிறாள்!'' என்றார்.



# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.

கீழ்க்காணும் கதையைப் படியுங்கள்:



ராமுவும், சோமுவும் ஒரே கிராமத்தைச் சேர்ந்த நண்பர்கள். இருவரும் ஒருமுறை சந்தைக்குச் சென்று கழுதைகள் வாங்கி வந்தனர். வீட்டிற்கு வந்த ராமு, தன் கழுதைக்கு தான் சொல்வதை எல்லாம் செய்யப் பயிற்சி அளித்தான். ஆனால் அவனுடைய கழுதை அவன் சொன்னது எதையுமே செய்யவில்லை.

இரண்டு வாரங்களுக்குப் பிறகு, நண்பர்கள் இருவரும் சந்தித்தனர். ''உன்னுடைய கழுதை எப்படி இருக்கிறது?'' என்று ராமு கேட்டான். ''நான் சொன்னதெல்லாம் அது செய்கிறது!'' என்று சோமு பதிலளிக்க, ராமு வியப்படைந்தான். ''அது எப்படி? என் கழுதை நான் என்ன சொன்னாலும், எதுவும் செய்வதில்லையே!'' என்று கேட்டான்.

மீதியுள்ள கதையை நீங்கள் எழுதுங்கள். தயவு செய்து ஏற்கெனவே மேலே எழுதப்பட்டுள்ளதை மீண்டும் திருப்பி ஒருமுறை எழுத வேண்டாம். கீழ்க்காணும் கேள்விக்கு பதில் அளிக்கும் வகையில் மீதிக் கதையை எழுதுங்கள்.

சோமு தன் நண்பன் ராமுவிற்கு என்ன அறிவுரை கொடுத்திருப்பான்?

உங்கள் கதை 100 முதல் 150 வார்த்தைகளுக்குள் இருக்க வேண்டும். கதைக்கு ஒரு பொருத்தமான தலைப்பும் சூட்டுங்கள். உங்கள் கதையை கீழ்க்காணும் கூப்பனுடன் ஓர் உறையிலிட்டு, 'கதைப்போட்டி' என்று குறிப்பிட்டு அனுப்பவும்.

## முடிவு தேதி : அக்டோபர் 31, 2005

பெயர் ---------------------------------------வயது-----------பிறந்த தேதி------------------

பள்ளியின் பெயர் --------------------------------------------------------------------------------

வகுப்பு--------------------------------வீட்டு முகவரி--------------------------------------

------------------------------------------------------------------------------------------------

-------------------------------------------------------------பின்கோடு--------------------

பெற்றோர் கையொப்பம் கலந்து கொள்வோரின் கையொப்பம்

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.



# நீ ஏன் மதிக்கவேண்டும்?

பிரம்மதத்தன் காசியை ஆண்ட போது போதிசத்வர் அவரது அமைச்சராக இருந்தார். ஒரு முறை பிரம்மதத்தனுக்குத் தன் மகன் மீது ஏதோ ஒரு காரணத்தால் கோபம் ஏற்பட்டு விட்டது. அதனால் அவனை நாட்டை விட்டே வெளியேற்றி விட்டான். அரசகுமாரனும் தன் மனைவியுடன் அங்கிருந்து கிளம்பிப் போய் பல நாடுகளில் அ லைந்து தி ரிந்து ப ல துன்பங்களை அனுபவித்தான்.

சில வருடங்களுக்குப் பின் பிரம்மதத்தன் இறந்து போனான். அதைக் கேட்டதும் அவனது மகன் அயல் நாட்டிலிருந்து கி ளம்பி க ாசியை நோக்கி நடந்து வரலானான். அவனது மனைவியால் அவனுக்குச் சமமாக வேகமாக நடக்க முடியவில்லை. இருவருக்கும் பசி எடுத்தது.

அவர்கள் ஒரு ஊரை அடைந்த போது அந்த ஊர்க்காரர்கள் அவர்களைப் பார்த்து ''ஐயோ பாவம். ரொம்பவும் களைத்துப் போய் இருக்கிறீர்களே. இங்கேயே சாப்பிட்டு விட்டுக் கையில் சிறிது கட்டி எடுத்துக் கொண்டும் போகிறீர்களா?'' என்றனர்.

அரசகுமாரனோ ''சாப்பிடுவதற்கு நேரமில்லை. சிறிது கட்டிக் கொடுங்கள். எடுத்துக் கொண்டு போகிறோம்'' எனக் கூறித் தன் மனைவியை ஓரிடத்தில் சற்று நேரம் உட்கார்ந்திருக்கச் சொன்னான். பிறகு உணவு கொடுப்பதாகச் சொன்னவன் வீட்டிற்கு அவன் போனான். அந்த வீட்டுக்காரனும் இருவரும் சாப்பிடும் அளவிற்கு உணவை இலையில் கட்டிக் கொடுத்து அனுப்பினான்.

அரசகுமாரனும் உணவுப் பொட்டலத்தை எடுத்து வரும் போது 'இதில் இருவருக்கான உணவு உள்ளது. காசிக்குப் போய்ச் சேர வேண்டியவன் நான்தானே. என் மனைவியைப் பற்றிக் கவலைப் படுவானேன்? அதனால் இரண்டு

-ஜாதகக் கதை-

பேர்களுக்கான உணவை நானே சாப்பிட்டு விடுகிறேன்' என எண்ணிக் கொண்டபடியே அவன் தன் மனைவி இருந்த இ டத்திற்குப் போய் ' 'நீ முன்னால் போய்க் கொண்டிரு. நான் நித்திய கடன்களை முடித்து விட்டு வருகிறேன்'' எ னக் கூ றி அ வளை அனுப்பி விட்டு, அவள் போனதும் அவன் உணவுப் பொட்டலத்தை பிரித்து எ ல்லாவற்றையும் த ானே சாப்பிட்டான். பிறகு வெறும் இலை களைப் பொட்டலம் போலச் செய்து எடுத்துக் கொண்டு அவன் மனைவி இருந்த இடத்தை அடைந்தான்.

அவளிடம் அவன் பொட்டலத்தைக் கொடுப்பது போல நடித்து திடீரென்று ''ஆ! என்ன மோசம்! நமக்கு உணவு கொடுப்பதாகச் சொல்லி விட்டு வெறும் இலைகளைக் கட்டிக் கொடுத்திருக்கிறார்களே!'' என்று அப்பொட்டலத்தைப் பிரித்தான்.

அவனது மனைவி உண்மையைப் புரிந்து கொண்டு விட்டாள். ஆனாலும் கணவனுக்கு மரியாதைக் காட்ட வேண்டும் என்பதற்காக எதுவும் பேசாமல் இருந்தாள். இன்னும் சில நாள்கள் நடந்து சென்று முடிவில் ஒருவாறாக காசியை அடைந்தார்கள்.

அரசகுமாரன் நேராக அரண் மனைக்குப் போய் தான் வந்திருப் பதைக் கூறி பட்டாபிஷேகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்து சிம்மா சனத்தில் அ மர்ந்தும் வி ட்டான். அரசனான பிறகு அவன் தன் மனைவியைப் பற்றிச்சற்றும் கவலைப் படவில்லை. அதனால் அவள் முன்



போலக் கவலைப் பட்டுக் கொண்டே இருக்கலானாள்.

அரசனின் அமைச்சரான போதி சத்வர் ராணி எப்போதும் கவலையுடன் இருப்பதைக் கவனித்து அவளிடம் சென்று ''அம்மணீ! அரசர் தமக்கு நல்ல க ாலம் வ ந்ததற்காக எனக்கு ஏராளமான பரிசுகள் அளித்தார். ஆனால் நீங்கள் ஒரு பரிசு கூட அளிக்கவில்லையே'' என்று கேட்டார்.

அதற்கு ராணியும் ''ஐயா! நான் பெயருக்குத்தான் ராணியாக இருக்கி றேனே ஒழிய எனக்கும் அந்தப் புரத்தில் பணிபுரியும் பெண்களுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை'' என்று தன் மனத்தில் உள்ளவற்றைக் கூறி, அதுதான் ''போகட்டும். இப்போதாவது நான் சாப்பிட்டேனா சௌகரியமாக இருக்கிறேனா என்று அவர் என்னிடம் கேட்கலாமல்லவா''

எனக் கூறிக் கண்ணீர் வடித்தாள்.

போதிசத்வரும் ' 'மகாராணி நடந்ததை மறந்து விடுங்கள். உங்கள் துயரத்தை உங்களிடமிருந்தே கேட்டு அறிய வேண்டும் என்றுதான் நான் இங்கு வந்தேன். நான் நாளை தர்பாரில் உங்களிடம் கேள்வி கேட்கிறேன். இதே பதிலை நாளை நீங்கள் சொல்லுங்கள். உங்கள் கவலையைப் போக்கச் செய்கிறேன்'' என்று ஆறுதல் கூறி விட்டுச் சென்றார்.

மறுநாள் தர்பாருக்கு ராணியும் வந்தாள். அப்போது போதிசத்வர் ராணியிடம் ''அரசியார் பட்டத்திற்கு வந்தும் ஏழைப் பணியாளர்களான எங்களைக் கவனிக்கவில்லையே'' என்று கேட்டார். உடனே அவள் தன் கணவனின் செயலைப் பற்றிக் கூறினாள். தான் அவளுக்கு உணவு கூடக் கொடுக்காமல் திருட்டுத் தனமாகச் சாப்பிட்ட விஷயம் அனைவர் முன்பும் வெளிப்பட்டதும் அரசனுக்கு அவமானமாகப் போயிற்று.

உடனே போதிசத்வர் ''ராணியாரே! அரசர் உங்களை மதிக்கிறதில்லை என்பது தெளிவாகி விட்டது. பின் ஏன் அவரோடு இருக்க வேண்டும்?'' எனக் கூறி ஒரு சமஸ்கிருத சுலோகத்தையும் கூறினார்.

அதன் கருத்து பின் வருமாறு: ''விட்டுப் போகிறவனை விட்டு விடு. அவனது நட்பையும் தொடர்பையும் விரும்பாதே. மதியாத ஒருவனை நீயும் மதிக்காதே. பறவைகள் பழங்கள் இல்லாத மரங்களை விட்டுப் பறந்து வேறு பழம் கொடுக்கும் மரத்தில் போய் வசிக்கின்றன. உலகம் பரந்து கிடக்கிறது. அதில் உனக்கா இடம் இல்லை?''

இப்படி போதிசத்வர் கூறியதும் பிரம்மதத்தனின் மகன்போதிசத்வரின் கால்களில் விழுந்து ''அமைச்சரே! என்னை மன்னியுங்கள். நான் என் அகம்பாவத்தால் குருடனாகி விட்டேன். இனி என் மனைவியை கண்ணியமுடன் நடத்துவேன்'' எனக் கூறிக் கண்ணீர் வடித்தான். பின்னர் அவன் தன் மனைவியோடு சுகமாக வாழலானான்.





# மகாவிஷ்ணு

கபிலவஸ்து நகரிலிருந்து வெகு தூரம் சென்றபின் சித்தார்த்தர் தம் குதிரையிலிருந்து இறங்கினார். தன் விலையுயர்ந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் சென்னனிடம் கொடுத்து ''தந்தையிடம் என் வணக்கத்தைக் கூறி இந்த சித்தார்த்தன் அறிவு பெற்று தர்ம சக்கரவர்த்தியாக கபிலவஸ்துவில் அடி எடுத்து வைப்பான் எனக்கூறு. சித்தார்த்தன் என்ற பெயருக்கு ஏற்ப வாழ்வின் அர்த்தத்தைக் காணச் செல்கிறேன் என்று சொல்'' எனக்கூறினார்.

சென்னன் பேசமுடியாமல் கண்ணீர் வடித்து நிற்கவே சித்தார்த்தர் ''சென்னா! தாயை நான் சிறு வயதில் இழந்தேன். அப்போது முதல் இதுவரை நீ பாதுகாத்து வந்தாய். உன் கடனை எப் படித் தீ ர்ப்பேன்? இப்போதும் இந்த இருளிலும் என்னை நடத்தி வந்திருக்கிறாய். நான் ஞான ஒளியைப் பெறவே இந்த இருளிலிருந்து செல்கிறேன். இதற்கு உதவியவன் நீதான்'' என்றார்.

சென்னனும் பிரியாவிடை பெற்று நகருக்குக் குதிரைமீது ஏறிச் சென்றான். சித்தார்த்தர் நேர் எதிர்ப் பாதையில் சென்றார். சென்னன் அரண்மனையை அடைந்து செய்தியைக் கூறியதும் சுத்தோதன மன்னன் அடியற்ற மரம்போல விழுந்தான்.

சித்தார்த்தரின் மனைவி யசோதரை தன் மகன் இராகுல னை இடுப்பில் வைத்துக் கொண்டு ''உன்னால் கூட அவரை போகவிடாமல் தடுக்க முடிய வில்லையே'' என்று கதறினாள். அவளுக்கு அப்போது தன் கணவரின்



ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் உருவம் மனத்தில் தோன்றியது. உடனே மனத்தைத் தேற்றிக் கொண்டு அவள் எழுந்து தன் நினைவு இழந்து கிடக்கும் மாமனாரின் மயக்கத்தைப் போக்கலானாள்.

மன்னன் சுத்தோதனன் கண் திறந்ததும் யசோதரை ''உங்கள் மகன் உலகை உய்விக்க வந்த மகான். பகவானின் மறு அவதாரம். நமக்கு அவர் விட்டுப் போன இந்த இராகுலனைப் பேணி வளர்ப்போம். மனத்தைத் தேற்றிக் கொள்ளுங்கள்'' என்று ஆறுதல் கூறினாள். சுத்தோதனனும் இராகுலனுக்கு நல்ல படிப்பு சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்து காத்து வந்தார்.

உண்மையைத் தேடி சித்தார்த்தர் பல இடங்களில் அலைந்து சிரமப் பட்டார். இம்முயற்சியில் பசியாலும் தாகத்தாலும் சோர்ந்துபோய் அவர் வழியில் கிடந்தார். அவரை மாடு மேய்க்கும் ஒருவன் கண்டு பாலைக் குடிக்கச் செய்து காப்பாற்றினான். அப்போது தான் சித்தார்த்தருக்கு ஒரு உயிரைக் காப்பது எவ்வளவு உயரிய பணி என்பது தெரிந்தது.

சன்னியாசியாக அவர் திரிந்து பல முனிவர்களையும் யோகிகளையும் தவம் புரிபவர்களையும் சந்தித்தார். அவர்களிடம் பேசிப் பல விஷயங் களை அவர் தெரிந்து கொண்டார். தவம் செய்தால் எதுவும் கிடைத்து விடும் என அவர்கள் எல்லாரும் கூறினார்கள்.

அதன்படியே சித்தார்த்தர் கடும் தவம் புரியலானார். அப்போது நிறைமாத கர்ப்பிணியான சுஜாதா என்னும் இடைப்பெண் தனக்கு ஆண் குழந்தை பிறக்க அவரை வேண்டிக் கொண்டாள். அவளுக்கு ஆண் குழந்தையும் பிறந்தது. அப்போது அவள் பழங்களையும் பாலையும் எடுத்துக் கொண்டு அவரை தரிசிக்கச் சென்றாள்.

அப்போது சித்தார்த்தர் தம் நினைவிழந்து கிடந்தார். சுஜாதா தான் கொண்டு வந்த பாலைக் குடிக்கச் செய்து அவரது மயக்கத்தைப் போக்கினாள். பிறகு அவள் ''சுவாமி! தங்களது அருளால் எனக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. இதனை ஆசீர்வதியுங்கள்'' எனக் கூறித் தன் குழந்தையை அவரது காலின் கீழ் கிடத்தினாள்.

சித்தார்த்தர் அக்குழந்தையை ஆசிர்வதித்தவாறே ''பெண்ணே! நீ நினைப்பது ே பால எ ன்னிடம் விசேஷ சக்தி எதுவும் இல்லை. எல்லாம் அந்த பகவானின் அருள். நீ எனக்கு உயிர் அளித்ததோடு என் அகக்கண்களையும் திறந்து விட்டாய். பகவானே எல்லாவற்றையும் செய் கிறார்'' என்றார்.

சுஜாதாவோ ''சுவாமி! நீங்கள் தன் அடக்கம் காரணமாக இவ்வாறு கூறுகிறீர்கள். உண்மையிலேயே நீங்கள் மகிமை வாய்ந்த மகான். இது எனக்குத் தெரியும். நாங்கள் இடைக் குலம். நீங்களோ பெரிய இடத்தில் பிறந்தவர். என் வீட்டிற்கு எழுந்தருளி நான் அளிக்கும் எளிய விருந்தை ஏற்க வேண்டும்'' என்று வேண்டினாள்.

சித்தார்த்தரோ ''பெண்ணே! என் தவத்தின் பலன் எதுவும் கிட்ட வில்லை. நானும் உன்னைப் போல சாதாரண மானிடன்தான். மனிதர் களிடையே உயர்வு தாழ்வு என்பது இருக்கவே கூடாது. எனக்கு ஒன்றும் விசேஷ சக்தி இல்லை. அப்படிப் பட்ட சக்தி எனக்கு வந்த பிறகு உன் வீட்டிற்கு வந்து நீ அளிக்கும் விசேஷ மரியாதைகளை ஏற்கிறேன்'' என்றார்.

''நீங்கள் அத்தகைய சக்தி உடையவர் என்பதை நீங்கள் உணரத்தான் போகிறீர்கள். அப்போது கண்டிப்பாக என் வீட்டிற்கு வர வேண்டும். அதுவரை நான் காத்திருப்பேன்'' எனக் கூறி அவள் அவரது பாதங்களைத் தொட்டு



வணங்கினாள். பிறகு தன் குழந்தையை எடுத்துக் கொண்டு அவள் அங்கிருந்து சென்றாள்.

சித்தார்த்தர் கடுந்தவம் செய்வது வீண் எனக் கண்டார். தவம் புரிவோர் சுயநலம் கருதியே செய்கிறார்கள் என்பது அவர் மனத்தில் பதிந்தது. அவர்கள் மற்ற ஜீவராசிகளுக்குத் தம் தவத்தால் எவ்வித நன்மையும் செய்வதில்லை என்பதையும் கண்டார். இவ்வாறு உடலை வருத்திக் கடும் தவம் புரிவது தற்கொலை செய்து கொள்வதற்குச் சமம் என அவருக்குப் பட்டது. இதனால் தவம் செய்வதை நிறுத்தினார். அது கண்டு மற்ற சாதுக்கள் அவரை விலக்கி வைத்தார்கள்.

இந்தத் தவயோகிகள் ஏதோ சில வித்தைகளைக் கற்று அவற்றைச் செய்துகாட்டி மக்களை மதி மயங்க



வைத்து தாம் மிகவும் சக்தி வாய்ந்த வர்கள் என அவ ர்களை நம்ப வைப்பதை சித்தார்த்தர் கண்டார். இதனால் மக்கள் திசை மாறிச் செல்வது அவருக்கு தெரிந்தது. இயற்கையின் நியதியை மாற்ற முடியாது என்ற உண்மையை இவர்கள் அறியவில்லையே என மனம் புழுங்கினார். இம்மாதிரி அறியாமையில் மூழ்கி மூடநம்பிக்கை களைக் கொண்ட மக்களை எவ்வாறு மாற்றுவது?

யாகங்கள் செய்வதாகக் கூறிப் பல உயிரினங்களை பலியிடுகிறார்கள். இம்மாதிரி பலியிடப்படும் மிருகங் களின் மாமிசத்தை மன்னர்களும் மற்றவர்களும் ருசித்து உண்கிறார்கள். இது மனிதர்களின் தரத்தைக் குறைப்ப தாகும். இவ்வாறு பலவிதமாக எண்ணியவாறே சித்தார்த்தர் கயாவில் ஒரு பெரிய அரச மரத்தடியே உட் கார்ந்து யோசிக்கலானார். அப்போது திடீரென அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது.

அன்று வைசாக பௌர்ணமி. சந்திரன் முழுவட்ட நிலாவாகத் தோன்றினான். சித்தார்த்தருக்கும் முழுமையாக ஞானம் ஏற்பட்டது. அது முதல் அவர் புத்தர் என அழைக்கப் பட்டார்.

அந்த ஞானம் உதயம் ஆன போது பௌர்ணமி தினமாதலால் வைசாக பௌர்ணமியை புத்த பௌர்ணமி எனவும் மக்கள் கொண்டாடலாயினர். அவர் அமர்ந்திருந்த இடத்தில் இருந்த மரத்திற்கு போதி மரம் என்றும் அவருக்கு போதிசத்வர் என்றும் பெயர் ஏற்பட்டது.

மனிதன் ஆறறிவு படைத்தவன். மிருகங்களைப் போலல்லாமல் யோசிக்கும் திறன் படைத்தவன் அந்த அறிவைக் கொண்டு பிறரை மேம்பாடு அடையச் செய்வதே ஒருவனின் கடமையாகும். ஜீவராசிகளுக்குத் தீங்கிழைக்காமல் மனத்தாலும் வாக்காலும் உடலாலும் எவரையும் துன்புறுத்தாமல் அகிம்சை வழியைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று புத்தர் உபதேசிக்கலானார். ஆசைகளை அடக்கி, கோபம் வெறுப்பு முதலிய வற்றை மனத்திலிருந்து அகற்றி சுகதுக்கங்களுக்கு அப்பாற்பட்ட நிர்வாண நிலையை அதாவது மோட்சத்தை ஒருவன் அடைய

வேண்டும் என்பதே புத்தரின் கொள்கை. இந்த ஒளி ஒருவனிடம் இருந்து மற்றவருக்குப் பரவ வேண்டும் என்பதே அவர் விரும்பியது.

தாம் அறிந்து கொண்ட உண்மைகளை புத்தர் மக்களுக்கு எடுத்துக் கூறலானார். ஆரம்பத்தில் அவரைப் பலர் இதற்காக கேலி செய்தார்கள். பின்னர் அவர்களே அவர் போதிப்பதில் உள்ள உண்மைகளை உணர்ந்து அவரது சீடர்களாயினர். புத்தரது போதனைகள் மிக எளிதாய் யாவரும் புரிந்து கொள்ளும் விதமாய் இருந்தன.

அவரது போதனைகளில் சத்தியம், அகிம்சை, தியாகம் என்பவை திரும்பத் திரும்ப கூறப்பட்டன. அவரது அகிம்சைக் கொள்கை மகத சக்கரவர்த்தியான பி ம்பிசாரரைப் பெரிதும் கவர்ந்தது. அதனால் அவர் யாகங்களில் உயிர்ப்பலி கொடுக்கக் கூடாது என்று தடை விதித்தார். தனது மகுடத்தையே தலையிலிருந்து எடுத்து அவர் புத்தரது பாதங்களில் சமர்ப்பித்தார். அ வரது க ட்டளைகளை அவர் சிரம்மேல் தாங்கினார்.

புத்தரது உபதேசங்கள், கொள்கைகள் வழிமுறைகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு பௌத்த மதம் தோன்றியது. இந்த மதத்தைச் சேர்ந்தவர்களை புத்தர்கள் என மக்கள் குறிப்பிட்டனர்.

இருளில் தத்தளித்த உலகத்தை தம் ஞான ஒளிகாட்டி புத்தர் நேர் பாதையில் அதனைச் செல்லச் செய்தார். த ர்ம ச க்கரம் சு ழன்று யாவரும் பேரின்பம் பெற வேண்டுமென இவர் செயல்பட்டதால் மக்கள் மனத்தைக் கவர்ந்த சக்கரவர்த்தியானார் என்றே கூறலாம்.

புத்தர் பல நாடுகளில் திரிந்து தம்



கொள்கைகளைப் பரப்பினார். ஆங்காங்கு பௌத்த சங்கங்களை ஏற்படுத்தினார். இவை மக்களுக்கு நற்பணிபுரியும் வழிகளாயின. புத்தர் முன் பல மன்னர்கள் அடிபணிந்து நின்றார்கள். அவருக்குக் குற்றேவல்கள் புரிந்தார்கள். மன்னர்களுக்கு மன்னனாகி அவர் உபதேசித்த அகிம்சை வழியை அவர்கள் கடைப்பிடித்தார்கள். பௌத்தர்களிடையே ஜாதி, இனம் என்ற வேறுபாடுகள் இருக்கவில்லை. எல்லாரும் சமம் என்ற நிலையே அவர்களிடையே இருந்தது.

இப்படியே புத்தர் காலக் கிரமத்தில் கடவுளாகவே கருதப் பட்டார். புத்த பகவான் என மக்கள் அவரைத் துதித்து வணங்கினார்கள். ஆனால் புத்தர் தமக்கு எவ்வித பூஜையையும் வழிபாட்டையும் ஏற்கவில்லை. ஆறுவருட காலத்திற்குப் பின் அவர் கபில வஸ்துவிற்கு வந்தார்.

புத்தரை வரவேற்க பிரமாதமான ஏற்பாடுகளை மக்கள் செய்தனர். மன்னன் சுத்தோதனன் தன் மகன் வரப்போவது கண்டு மகிழ்ந்தான். இராகுலனும் தன் தந்தையின் வருகைப் பற்றித் தன் தாயிடம் கூறிப் பரமானந்தம் அடைந்தான்.

அப்போது யசோதரை உன் தந்தை பிக்ஷுவாக வருகிறார். சக்கர வர்த்தியான அவருக்கு நாம் பிக்ஷை அளிக்க வேண்டும்.

உலக மக்களின் சக்கரவர்த்தியான அவர் ''வீடு, வாசல், நாடு, நகரம், மனைவி மக்கள், உற்றார், உறவினர் என்ற பந்தங்களை எல்லாம் உதறித் தள்ளி உலகையே உய்விக்கச் சென்றார். அவரது போதனைகளின் படி நடக்க வேண்டியது நம் கடமை'' என்றார்.

இராகுலனும் ' 'அம்மா! நீ கூறியபடியே என் தந்தை கூறும் வழியிலேயே நான் செல்வேன்'' என்றான். யசோதரை மனம் பூரித்துப் போய் இராகுலனை ''நீதான் உன் தகப்பனாரின் சரியான மகன்'' என்று கூறியவாறே அன்புடன் அணைத்துக் கொண்டாள்.





# வீரபாகுவின் ஆவி

ஒரு கிராமத்தில் வீரபாகு என்ற விவசாயி, தன் மனைவி ஜமுனா, மகன் க ண்ணன் ஆகி யோருடன் வாழ்க்கை நடத்தி வந்தான். கண்ணன் பார்ப்பதற்கு அச்சாக தன் தந்தையைப் போலவே இருந்தான்.

ஒருநாள் அதிகாலை நேரத்திலேயே, வீரபாகு அறுவடைக்காக தன் வயலை நோக்கிச் சென்று விட்டான். சிறிது நேரத்திலேயே, வீரபாகுவின் உயிரற்ற உடலை மற்ற விவசாயிகள் அவன் வீட்டிற்குக் கொண்டு வந்தனர். வீரபாகுவை வயலில் இருந்த ஒரு நாகம் தீண்டியதால், விஷம் தலைக்கேறி அவன் இறந்து விட்டான்.

ஜமுனா தன் கணவனின் மறை வினால் பைத்தியம் பிடித்தவள் போல் ஆனாள். ஒருநாள் ஜமுனாவின் கனவில் கணவன் வீரபாகு ஆவியாகத் தோன்றினான். அதைக் கண்டு எழுந்த ஜமுனா அலறித் துடித்தாள். பக்கத்து வீட்டுப் பெண்கள் ஓடி வந்து அவளை சமாதானப் படுத்தினர். அவர்களிடம், ''என் கணவர் பேயாக மாறி விட்டார். என் கனவில் அவர் பேயாக வந்தார்,'' என்று திக்கித் திணறி கூறினாள். மீண்டும் அவளை சமாதனப் படுத்தி விட்டு அனைவரும் சென்றனர்.

ஆனால் வீரபாகு இறந்த மூன்றாம் நாள் இரவே ஒரு விசித்திர சம்பவம் நிகழ்ந்தது. மயானத்தின் வழியாக இரவு நேரத்தில் திரும்பிக் கொண்டு இருந்த பக்கத்து ஊர் வியாபாரி மயங்கி விழுந்திருந்தான். அவனைக் கண்ட சி லர், அ வனுக்கு ம யக்கம் தெளிவித்து உதவி செய்தனர். பயத்தினால் வெளிறிப்போன முகத்துடன் அவன், ''நேற்றிரவு நான் மயானத்திற்கருகே உள்ள ஆல மரத்தின் அருகே வந்தபோது, திடீரென ஆலமரத்தின் கிளைகளைப் பற்றித் தொங்கிக் கொண்டு வெள்ளை உடை அணிந்த ஓர் உருவம் தென்பட்டது. அது என்னைப் பார்த்து, 'உன்னிடம் உள்ளவற்றை எனக்குக் கொடுத்து விடு. என்னுடைய மனைவியையும்,

25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை




பிள்ளையையும் பராமரிக்க எனக்கு பணம் தேவை. நான் யார் தெரியுமா? நான்தான் வீரபாகுவின் ஆவி!' என்று பயங்கரமாக சிரித்தது. அதனால் நான் மயங்கி விழுந்து விட்டேன். என்னுடைய பணம் எல்லாம் ஆவி எடுத்துக் கொண்டது!'' என்றான்.

இதைக் கேட்டதும் கிராமத்தினர் ஜமுனாவின் வீட்டை அடைந்து சோதனையிட்டனர். ஆனால் பணம் எதுவும் தென்படவில்லை. ஜமுனா விற்கோ இதனால் பெருத்த அவமானம் ஏற்பட்டது. மிகவும் நல்லவரான தன் கணவர் ஏன் இறந்தபிறகு இப்படி ஒரு பேயாக மாறி கெட்ட காரியம் செய்ய வேண்டும் என்று புரியவில்லை.

ஆனால் கிராமத்தினர் அன்று முதல் ஜமுனாவையும் கண்ணனையும் வெறுக்கத் தொடங்கினர். அடுத்த நாள் இரவு, ஒரு புதுமண தம்பதியை வீரபாகுவின் ஆவி பயமுறுத்தி நகைகளைப் பிடுங்கிக் கொண்டது. ''இவற்றை என் மனைவி அணிந்து கொண்டால் அழகாக இருப்பாள்!'' என்றும் ஆவி கூறியது.

உடனே மீண்டும் கிராமத்தினர் ஜமுனாவின் வீட்டை சோதனை இட்டனர். ஆனால் திருட்டுப்போன நகை எதுவும் காணவில்லை. இருந்தாலும், மற்றவர்களுக்கு ஜமுனா மீது நம்பிக்கை உண்டாகவில்லை. ஜமுனா திருட்டுச் சாமான்களை எங்கோ பதுக்கி வைத்திருக்கிறாள் என்றும் நம்பினர்.

அடுத்த சில நாள்களிலும், இரவு நேரங்களில் மயானத்தின் வழியே சென்ற சிலர் வீரபாகுவின் ஆவியைப் பார்த்தாகக் கூறினர். அதனால் இரவு நேரம் மயானத்திற்கு அருகே யாருமே செல்வதில்லை. ஆனால் இந்தப் பிரச்சினைக்கு ஒரு முடிவு கட்ட, ஊரார் கூடி யோசித்தனர். பிறகு அனைவரும் ஜமுனாவின் வீட்டை அடைந்து அவளிடம், ''இதோ பார்! நீயும், உன் மகனும் இந்த ஊரில் இருக்கும் வரை, வீரபாகுவின் ஆவியும் இங்கேயேதான் இருக்கும். நீ உன் மகனுடன் இந்த ஊரை விட்டுச் சென்று விடு'' என்றனர்.

தானிருக்கும் வீட்டை விட்டு எங்கே போவது? வெளியூருக்குச் சென்று எப்படி இருப்பது என்று கவலையில் ஆழ்ந்தனர் ஜமுனாவும், கண்ணனும். உடனே ஜமுனா ஒரு தீர்மானம் செய்தாள். அதன்படி, அன்றிரவு மயானத்திற்குச் சென்றாள். அப்போது ஆலமரத்தின் கிளைகளில் அமர்ந்திருந்த ஓர் உருவம், ''நில்!

உன்னிடம் உள்ளவற்றைக் கொடுத்து விடு. என் மனைவிக்கும், மகனுக்கும் நான் உதவி செய்ய வேண்டும்! நான் யார் தெரியுமா? வீரபாகுவின் ஆவி!'' என்றது. அது தன்னுடைய கணவனின் குரலே அல்ல என்று ஜமுனா தெரிந்து கொண்டாள். உடனே அவள் வீட்டிற்கு ஓடோடி வந்து தன் மகனிடம், ''கண்ணா! மயானத்தில் இருந்து கொண்டு ஊர் மக்களை பயமுறுத்துவது உன் தந்தையின் ஆவியைபோல் ஒருவன் நடிக்கிறான். அவனை சும்மா விடக்கூடாது!'' என்று படபடப்புடன் கூறினாள். உடனே இருவரும் அந்தப் போக்கிரியின் முகத்திரையை கிழிக்க ஒரு திட்டம் தீட்டினர்.

அவர்கள் திட்டப்படி கண்ணன் தன் தந்தையைப் போலவே வெள்ளை வேட்டியும் சட்டையும் அணிந்து கொண்டான். ஏற்கெனவே தன் தந்தையின் சாயலில் இருந்ததால், கண்ணனைப் பார்த்தால் வீரபாகு போலவே தோன்றியது. பிறகு இருவரும் அந்திப் பொழுதிலேயே மயானத்திற்குச் சென்றனர். கண்ணன் ஆல மரத்தில் ஏறி கிளைகளுக்குள் ஒளிந்து கொண்டான். ஜமுனா ஒரு புதரில் பதுங்கிக் கொண்டாள். இருவரும் போலி வீரபாகுவின் வருகைக்காகக் காத்திருந்தனர்.

நன்கு இருள் கவிழ்ந்ததும், தொலைவிலிருந்து வெள்ளை வேட்டி சட்டை அணிந்த ஒரு மனிதன் மெதுவாக வந்து, ஆல மரத்தில் ஏறிக் கொண்டான். 'அடடா! போலி ஆள் வந்து விட்டான். இன்னும் கண்ணன் ஏன் பேசாமல் இருக்கிறான்' என்று ஜமுனா நினைக்கையில் தடாலென்று அவன் மரத்திலிருந்து குதித்து



போலியான ஆளைப்பார்த்து, ''டேய் நயவஞ்சகா! யார் நீ? என் பெயரைச் சொல்லிக் கொண்டு ஏன் ஊரை ஏமாற்றுகிறாய்? இதோபார்! நான் வீரபாகுவின் ஆவி!'' என்றான்.

போலி மனிதன் பயத்தில் நடுங்கிக் கொண்டே மரத்திலிருந்து கீழே விழுந்தான். ''வீரபாகுவின் ஆவியே! என்னை மன்னித்து விடு!'' என்று அவன் வீரபாகுவைக் கையெடுத்துக் கும்பிட்டான். ''இதுவரை நீ திருடிய பொருட்களை கொடுத்து விடு. உன்னை விட்டு விடுகிறேன்!'' என்று வீரபாகுவின் ஆவி கூற, அவன் ஆலமரத்தின் அடியில் தான் புதைத்து வைத்திருந்த பொருட்களைத் தோண்டி எ டுக்கலானான். அ வன் அவ்வாறு செய்து கொண்டிருக்கும் போதே, ஜமுனா கிராமத்திற்கு ஓடிப்போய் கிராமத்து மக்களை கூட்டி வந்தாள்.

மயானத்து ஆலமரத்தினடியில் கண்ட காட்சி கிராமத்தினரைத் திகைக்கச் செய்தது. கிராமத்தினரைக் கண்டதும் வீரபாகுவின் ஆவி மறைந்து விட, போலி மனிதனை கிராமத்தினர் மடக்கிப் பிடித்தனர்.

சற்று நேரங்கழித்து சாவகாசமாகக் கண்ணன் மரத்திலிருந்து கீழே இறங்கினான். ''மன்னிக்க வேண்டும் அம்மா! நான் மரத்தில் ஏறிய சில நிமிடங்களிலேயே நன்றாகத் தூங்கி விட்டேன். இவர்களுடைய சத்தம் கேட்டுத்தான் விழித்தேன். அதுசரி, என்ன நடந்தது?'' என்று கேட்டேன்.

ஜமுனாவும், மற்றவர்களும் பேசவே மு டியாமல் தி கைத்துப் போய் நின்றனர். அப்படியென்றால் அத்தனை நேரம் அவர்கள் முன் இருந்தது வீரபாகுவின் ஆவிதான் என்ற உண்மை தெரிந்தது. அந்த அதிர்ச்சியிலிருந்து அவர்களால் மீளவே முடியவில்லை. தன் பெயரைச் சொல்லி ஊரை ஏமாற்றிய கயவனைக் கையும் களவுமாகப் பிடிப்பதற்காக, வீரபாகுவின் ஆவியே தக்க நேரத்தில் வந்து விட்டது. ஜமுனாவிடமும், கண்ணனிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொண்ட கிராமத்தினர் அ வர்களை ஊ ரை விட்டுச் செல்ல வேண்டா ம் என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டனர். அதன்பிறகு யாரும் வீரபாகுவின் ஆவியைப் பார்க்கவேயில்லை.



# சூர்யா

**27**

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

*வீரசிம்மனும், ஜபர்சிங்கும் சேர்ந்து கஜானாவைக் கொள்ளையடிக்கப் போட்ட திட்டம், புரட்சிக்காரர்களால் முறியடிக்கப் பட்டது. தன் திட்டத்தை முறியடித்த புரட்சிக்காரர்களை சிறைப்பிடிக்க வீரசிம்மன் அமிருதபுரியின் மீது தாக்குதல் நடத்தத் திட்டமிட்டான். வசந்தன் சூர்யாவை அனுப்பச்சொல்லி ஜெயானந்த முனிவருக்குத் தகவல் அனுப்பினான். சூர்யா முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டான்.*

ஓவியம் : காந்தி அய்யா

புரட்சிக்காரரர்கள் திரண்டிருந்த இடத்திற்கு சூர்யாவை வசந்தன் அழைத்துச் செல்கிறான்.













சூர்யா, இவர்களுக்கு நீ தலைமை வகிப்பது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது.
துரோகிகளை நாங்கள் நாட்டை விட்டு வெளி ஏற்றுவோம்!
சென்று வா! வெற்றி உனதே!
அதோ, மலைகளின் பள்ளத் தாக்கு! யாவரும் தங்களுடைய இடங்களுக்குச் செல்லுங்கள்!
வீரர்கள் அருகில் வருகின்றனர்.
நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்!
வீரர்கள் வசந்தனுடைய ஆணைக்குக் காத்திருக்கின்றனர்.
வீரசிம்மனையும், ஜபரையும் முன்னே செல்ல விடுங்கள். பின்னால் வரும் வீரர்களை சூழ்ந்து அவர்கள் மீது அம்பு விடுங்கள்.
அதோ! வீரசிம்மனும், ஜபரும் வருகின்றனர்!
வீரசிம்மன், ஜபர் இருவருக்கும் பின்னால் நடப்பது தெரியவில்லை.
HUGH!
என் மீது அம்பு பாய்ந்து விட்டது. யாராவது உதவுங்கள்!
பின்னால் வந்த வீரர்கள் அம்பு எய்யப்பட்டு கீழே விழுந்து விடுகின்றனர்.
ஐயோ அம்பு! எங்கிருந்து வந்தது?


பல வீரர்கள் மண்ணில் வீழ்கின்றனர். அவர்களுடைய கூக்குரல் ஒலி கேட்கிறது.
ஆ! ஐயோ!


ஒரு துணைத் தலைவன் வீரசிம்மனிடம் வருகிறான்.
எங்களை எதிரிகள் தாக்கி விட்டனர்.
எதிரிகளா? யார் அவர்கள்?
நாம் இந்த இடத்தை விட்டு சமவெளிக்கு சென்றால் அவர்களை ஒரு கை பார்க்கலாம்.


ஜபர், யார் அவர்கள்? நாம் இந்த வழியாக வருவது அவர்களுக்கு எப்படித் தெரியும்?
ஆதிவாசிகளாக இருப்பார்கள். நம்முடைய வீரர்கள் சமாளித்து விடுவார்கள்.


மற்றொரு துணைத்தலைவன் வருகிறான்.
மகாராஜா! எதிரிகள் நம் வீரர்களை சூழ்ந்து கொண்டு விட்டனர். அம்புகள் மழையாகப் பொழிகின்றன.


ஓர் அம்பு ஜபரைத் தொடுவது போல் பாய்கிறது. அவன் குனிந்து விடுகிறான்.
யார்? யார் அம்பு விடுவது?


வீரசிம்மன் ஜபர்சிங்கிற்காகக் காத்திருக்கவில்லை.
எதிரியின் வீரர்களா? யார் அந்த எதிரிகள்?


ஜபர்சிங் குதிரை மீதேறி புறபடத் தயாராகிறான்.
நீ திரும்பிச் சென்று நமது வீரர்களை நம் பின் வருமாறு செய்.


அடுத்த கணம், ஜபர் மீது ஓர் அம்பு பாய்கிறது. ஜபர் சுருண்டு விழுகிறான்.
ஆ! ஐயோ!
மகாராஜா! மகாராஜா!


உயிர் பிரிந்து விட்டது மகாராஜா!
வீரசிம்மன் அதைக் கேட்டு குதிரையிலிருந்து இறங்குகிறான்.


நீ திரும்பிச் சென்று நம் வீரர்களைத் திரட்டி இங்கே அழைத்து வா!
மகாராஜா!
பொழுது புலர்வதற்குள் அமிருதபுரியை அடைய வேண்டும்!


வீரசிம்மன் மீண்டும் குதிரையில் ஏறி சவாரி செய்ய முற்படுகையில், வசந்தனும், சூர்யாவும் அங்கு தோன்றுகின்றனர்.
அமிருத புரியின் மீது படையெடுக்கவா செல்கிறாய்? எதற்காக?


நில்!
தொடரும்

மனிதர்கள் உருவாக்கிய அற்புதங்கள்

# தில்லியின் செங்கோட்டை



இந்தியாவின் தலைநகரான தில்லியில் எழுப்பப்பட்டுள்ள செங்கோட்டை, இந்தியாவிலுள்ள மிக அற்புதமான கட்டடங்களில் ஒன்று. உருவாக்கியவர் முகலாய மன்னரான ஷாஜஹான். 1639ஆம் ஆண்டு ஆரம்பித்த கட்டட வேலை 1648ஆம் ஆண்டு நிறைவு பெற்றது. அதே ஆண்டில், ஷாஜஹான் மிக விமரிசையாக புதுமனை புகுவிழா கொண்டாடினார்.

செங்கோட்டைக்கு இரண்டு முகப்பு வாயில்கள் உண்டு. பார்வையாளர்கள் மேற்கு திசையில் அமைந்துள்ள லாஹூர் கேட் வழியாக செங்கோட்டைக்குள் அனுமதிக்கப் படுகின்றனர். கருங்கல்லால் உருவாக்கப்பட்ட ராஜ்பவனை இங்கு காணலாம். ராஜ்பவனுக்கு முன்னால், பச்சைக் கம்பளம் போர்த்தியது போல் அழகாகக் காட்சி தரும் ஒரு புல்வெளியையும் காணலாம். மற்றொரு பக்கத்தில் தீவானி ஆம் (ஆஸ்தான சபை) அமைந்துள்ளது. இதன் கிழக்குப் பகுதியில் உயரமான ஒரு மேடையில் சிம்மாசனம் உள்ளது. ஆஸ்தான சபையின் பின்புறம், பளிங்குக் கல்லினால் ஆன அழகான 'ரங்க் மகால்' உள்ளது. தாமரை வடிவத்தில் கலையழகுடன் அமைக்கப்பட்டுள்ள ரங்க் மகாலின் தென்புறத்தில் மும்தாஜ் மகால் உள்ளது. இதை 'சீஷ் மகால்' என்றும் அழைப்பார்கள். இதற்கு வடதிசைகளில் 'மகலீகாஸ்' உள்ளது. இதற்கும் வடதிசையில் மந்திராலோசனை சபையான தீவானி காஸ் உள்ளது. உலகப்புகழ் பெற்ற மயிலாசனம் இங்குதான் இருந்தது.

தீவானி காசின் வடக்குத் திசையில் ராஜ குடும்பத்தினரின் குளியலறைகள் உள்ளன. அருகிலேயே பளிங்கினால் கட்டப்பட்ட முத்து மசூதியும், நந்தவனமும், பளிங்கு மணி மண்டபமும் உள்ளன. நந்தவனத்தின் நடுவில் இரண்டாம் பகாதூர் ஷா உருவாக்கிய ஒரு கருங்கல் மாளிகையும் உள்ளது.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் விஞ்ஞானம்

### வெந்நீர் ஊற்றுகள்

பூமியில் மிகுந்த ஆழத்தில் உருகிய பாறைக் குழம்பு மிக அதிக வெப்ப நிலையிலுள்ளது. சில நேரங்களில் நிலத்தடி நீர் பாறைகளில் உள்ள விரிசல்கள் வழியே சென்று, உருகிய பாறைக் குழம்பை அடைந்து, வெந்நீராக மாறுகின்றன. அப்போது அந்த வெந்நீரின் வெப்பநிலை 150 டிகிரி செல்ஷியசை எட்டி விடும். இது சாதாரணத் தண்ணீரின் கொதி நிலையை விட மிக அதிகம். அவ்வாறு சூடான நீர், பூமியில் நிலத்தின் மேற் பரப்பிலுள்ள பிளவுகள், விரிசல்கள் வழியே வெந்நீர் ஊற்றுகளாக வெளி வருவதுண்டு. அவ்வாறு பீறிட்டு வரும் ஊற்றினைப் பார்ப்பது ஒரு கண் கொள்ளாக் காட்சியாகும்.



## உங்கள் சுற்றுப்புறம்

### மழை நீர் சேகரிப்பு



இயற்கை நமக்களித்துள்ள சீதனங்கள் ஒவ்வொன்றாகக் குறைந்து கொண்டே வருகின்றன. அவற்றில் சுத்தமான நீரும் ஒன்று. ஆனால் மழை நீரை முறையாக சேகரித்து வைத்தால், தண்ணீர் பற்றாக்குறையை நாம் சமாளிக்க முடியும். பெரிய பள்ளம் தோண்டி அதில் மழைநீரை சேகரித்து வைத்தால், நீர் வீணாகாமல் தடுப்பது மட்டுமன்றி, நிலத்தடி நீரின் அளவும் அதிகரிக்கும்.

ராஜஸ்தான் ம ாநிலத்திலுள்ள கிஷோரி கிராம மக்கள் ஜோஹாட் என்று அழைக்கப்படும் நீர்த்தேக்கங் களை உருவாக்கி மழை நீரை பல ஆண்டுகளாகவே முறையாக சேகரித்து வருகின்றனர்.

## உங்களுக்குத் தெரியுமா?

### தாவரங்களைப் பற்றி...

மனிதர்களைப் போல் தாவரங்களுக்கும் உணர்ச்சிகள் உண்டு என்பதைக் கண்டு பிடித்தவர் நமது இந்திய நாட்டின் தலை சிறந்த தாவரவியல் விஞ்ஞானியான ஆசார்ய ஜகதீஷ் சந்திர போஸ் ஆவார். மற்றொரு ருசிகரமான தகவலை, கியோடோப் பல்கலைக் கழக விஞ்ஞானிகள் அறிவித்து உள்ளனர். தாவரங்கள் தங்களுக்குள் தங்களுடைய மொழியில் பேசிக் கொள்ளுமாம்! உதாரணமாக, ஏதாவது ஆபத்து வருமென்று தோன்றினால், ஒரு மரம் தன் பக்கத்திலுள்ள மரங்களுக்கு சங்கேத மொழியில் தகவல் அனுப்புகிறது. லிமா எனும்



தாவரம் ஆபத்துக்காலங்களில் சில ரசாயனப் பொருட்களை வெளி விடுகிறது. அவற்றின் மூலம், மற்ற செடிகள் வரப்போகும் ஆபத்தை எதிர் கொள்ளத் தயாராகின்றன. சில தாவரங்கள் தங்களை எதிரிகள் உண்ண முயற்சித்தால், நச்சுப் பொருட்களை வெளியிட்டு தங்களை காத்துக் கொள்கின்றன.

## நம் இந்தியா

**இந்திய வரலாற்றைப் பற்றிய கீழ்க்காணும் கேள்விகளுக்குப் பதில் அளியுங்கள், பார்க்கலாம்!**



1. அக்பர் சிம்மாசனம் ஏறும் போது அவருக்கு எத்தனை வயது தெரியுமா?
2. கி.பி.375 முதல் 413 வரை ஆண்ட சந்திர குப்த விக்கிரமாதித்தர் காலத்தில், இந்தியாவிற்கு விஜயம் செய்த சீன யாத்திரிகர் யார்?



3. சிவாஜி ஒரு மகா வீரராக உருவெடுக்கக் காரணமாயிருந்த இருவர் யாவர்?
4. எந்த ஆண்டில் கஜினி முகமது சோமநாதர் ஆலயத்தைக் கொள்ளை அடித்தார்?



5. இந்தியாவின் தலை நகரை கொல்கத்தாவில் இருந்து தில்லிக்கு மாற்றுவதற்கான அறிவிப்பு எந்த ஆண்டு வெளியிடப்பட்டது?
6. கி.பி.1613 ஆம் ஆண்டு முதல் 1652 ஆம் ஆண்டு வரைக் கட்டப்பட்ட ஒரு மிகப் புகழ் பெற்ற கட்டடத்தின் பெயரினைக் கூறவும்.

(விடைகள் 70ஆம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி





KALANIKETAN BALU

இந்த
போட்டோக்களுக்கு
தொடர்புடையதாக
ஒரு
சொல்லாகவோ
அல்லது சிறு
வாக்கியங்களாகவோ
எழுதி
அனுப்புங்கள்.



MAHANTESH C. MORABAD

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ளதபால் கார்டுகளில் எழுதி,
இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த
வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவுடிசம்பர் 2005 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துகள்! பரிசு பெற்றவை

**ஆகஸ்ட் 2005 இதழில் வெளியிடப்பட்ட**
**போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**பா.ராம சுந்தரகிரிதரன்**
**த/பெ திரு.பாலசங்கர்,**
**எண் *1/69*, முதலியார் தெரு,**
**தளவாய்புரம்,**
**ராஜபாளையம் (வழி).**





''விளையாடும் நேரமிது,
நன்றாக விளையாடு;
படிக்கும் நேரமிது,
நன்றாகப் படி.''

## நம் இந்தியா – விடைகள் (பக்கம் 69)

1. பதிநான்கு.
2. ஃபா-ஹியான்.
3. தாய் ஜீஜாபாயும், குரு சுவாமி சமர்த்த ராமதாசும்.
4. கி.பி.1025.
5. 1911 டிசம்பர்.
6. தாஜ்மகால்.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)

# பெட்ரோலியம் சுத்திகரிப்பு முறை



பெட்ரோலியத்தைப் பற்றிய விளக்கவுரையை பொறியியல் வல்லுநர் திரு. தாஸ் விவரித்துக் கூற, வீணாவும் மற்ற மாணவர்களும் அதை ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்தனர்.

''இதுவரை பெட்ரோலியத்தைப்பற்றி பொதுவான சில விஷயங்களை கூறினேன். பூமியிலிருந்து எடுக்கப்படும் பெட்ரோலியம் எவ்வாறு சுத்திகரிக்கப் படுகிறது என்பதை இப்போது உங்களுக்கு விளக்குகிறேன்'' என்றார்.

''முதலில் பெட்ரோலியம் பூமிக்கு அடியில் கிடைக்கும் இடத்தைப் பல சோதனைகள் மூலம் கண்டு அறிகின்றனர். பிறகு அந்த இடத்தில் மிக அதிக ஆழத்திற்கு துளையிடப் பட்டு, எண்ணெய்க் கிணறு தோண்டப்படுகிறது. இந்தக் கிணற்றின்மேல் 'டெர்ரிக்' எனப்படும் சாதனம் அமைக்கப் படுகிறது. இதில் ஆழமாகத் தோண்டுவதற்கான கருவிகளும், பூமிக்கடியிலுள்ள பெட்ரோலியத்தை வெளியே கொண்டு வரும் குழாய்களும் பொருத்தப்படுகின்றன. இந்தத் தொடக்கப்பள்ளி முடிவுற்ற பிறகு, பூமிக்கடியிலுள்ள பெட்ரோலியம் எண்ணெய், குழாய்கள் மூலம் வெளியே கொண்டு வரப்படுகிறது.''

''வெளியே கொண்டு வரப்பட்ட பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலைக்குக் குழாய்கள் அல்லது கப்பல் மூலம் அனுப்பப்படுகிறது. சுத்திகரிப்பு ஆலையில் பெட்ரோலியம் சுத்தப்படுத்தப்பட்டு அதிலுள்ள பெட்ரோல், டீசல், கெரோசின், பிச்சுக்கட்டி, பாரஃபின் போன்ற பொருட்கள் தனித்தனியே பிரித்தெடுக்கப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் கொதிநிலை வெவ்வேறு ஆக உள்ளது. பெட்ரோலியத்தை கொதிக்க வைத்தால், வெவ்வேறு உஷ்ணநிலைகளில், மேற்கூறிய வெவ்வேறு பொருட்கள் ஆவியாகி, பெட்ரோலியத்திலிருந்து தனியாகப் பிரிந்து வருகின்றன. அவை தனித்தனியான தொட்டிகளில் சேமித்து வைக்கப்படுகின்றன. இவ்வாறு ஒரு சுத்திகரிப்பு ஆலையில் பெரிய கொதிகலன்கள், தொட்டிகள், குழாய்கள் என பல சாதனங்கள் உள்ளதால், ஆலை மிகப்பெரியதாக இருக்கும்'' என்று நீண்ட விளக்கம் தந்தார் திரு. தாஸ்.

தொடர்ந்து, அவர் ''பெட்ரோலியத்திலிருந்து அதன் மூலம் பொருட்களைப் பிரித்தெடுப்பது எவ்வளவு சிரமமான வேலை என்பதை அறிந்து கொண்டீர்களா? ஆகவே, நாம் பெட்ரோலியப் பொருட்களை மிக சிக்கனமாகப் பயன்படுத்துதல் அவசியம்,'' என்று சொல்லி முடித்தார்.

